

# சற்று தள்ளி நின்று பழக்கவும்...



"லலிதா...உனக்கும் நம்ம வீட்டுப் பால்காரனுக்கும்தான் தேங்ஸ் சொல்லணும்..... இன்னிக்கு அவன் மட்டம் போட்டதாலே நீ என்னை பூத் பாலுக்கு அனுப்பிச்சே. அங்க போனதால எனக்குப் பெரிய அதிர்ஷ்டம் அடிச்சிது." என்று சொல்லிக்கொண்டே அருகில் வந்தவன் பால் பாக்கெட்டை அவளின் பட்டுக் கன்னத்தில் உரசினான் சுந்தரேசன்.

" போதுமே... உங்க விளையாட்டு. ஐஸ்ல வச்ச பாலை இப்படி கன்னத்துல வச்சி... ஐயோ... ஜில்லுன்னு இருக்கு..." அவள் பொய்க் கோபத்துடன் சிணுங்கினாள்.

" லல்லி... என்னோட பல நாள் ஆசை இன்னிக்குப் பூர்த்தியாகப் போறது. ஆத்தூர் கண்ணன். என்னோட காலேஜ் மேட். நல்ல வசதியானவன். மெட்ராசுக்குப் படம் எடுக்க வந்திருக்கானும். ரஜினி காந்த் ஹீரோ. இன்னைக்கு வாஹினியில் ஷூட்டிங்" என்று சொல்லிக் கொண்டே மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தான் சுந்தரேசன்.

"போதுமே...மெட்ராசுலே ஒரு நாளைக்கு ஆயிரம் ஷூட்டிங் இருக்கு. அதை வேடிக்கை பார்க்கத்தான் மெனக்கெட்டு, சேலத்தில் இருந்துடிரான்ஸ்பர்வாங்கிட்டுவந்திங்களா?"

"அவன் எடுக்கிற படம் முடியற ஸ்டேஜ்ல இருக்காம். இருந்தாலும் ஒரு சின்ன ரோல் தர்றேன். இன்னைக்கே வாஹினிக்கு வான்னு விசிட்டிங் கார்டை எடுத்து நீட்டினான். ஐயாவோட முதல் ஷூட்டிங்கே சூப்பர்ஸ்டார்கூட தெரியுமா?"

லலிதாவிற்கும் சந்தோஷம் தாங்கவில்லை.

"லல்லி...! உன் பெட்டியிலே என்னோட பழைய கூலிங் கிளாஸ் இருக்கு பாரு... அதை எடு..."

" எதுக்குங்க ?"

"இன்னைக்கு அதுதான் என்னைக் காப்பாத்தப் போறது. என்ன... ஆபிஸ்ல இன்ஸ்பெக்ஷன். மானேஜர்கிட்ட போயி நான் ஷூட்டிங் போறேன். லீவ் வேணும்னு கேட்டா என் சீட்டையே கிழிச்சிடுவாரு... அதனால ஐயா... ஸ்டுடியோவுல நடிக்கிறதுக்கு முன்னால ஆபீஸ்லயே நடிப்பை ஆரம்பிக்கப் போறேன்!"

என்றும் இல்லாமல் லல்லி வாசல் வரை வந்து டாட்டா சொல்ல, சுந்தரேசன் கூலிங் கிளாஸ் அணிந்து ஜம்மென்று புறப்பட்டான்.

ஆபீஸிற்குள் நுழைந்ததும், மானேஜருக்கு ஒரு குட்மார்னிங் போட்டுவிட்டுத்தன் சீட்டிற்குப் போய் உட்கார்ந்த சுந்தரேசனைப் பின்னாலேயே வந்து பிடித்தான் பியூன் ராமலிங்கம்.

" சார்...உங்களை மானேஜர் வீட்டுக்குப் போகச் சொல்லிட்டாரு. மூணு நாள் கழிச்சு வந்தா போதுமாம்...!"

தன் திட்டம் சரியாக வேலை செய்ததும், தான் நடித்த படமே நூறு நாள் ஓடிய மகிழ்ச்சியுடன், வாஹினியை நோக்கிப் பறந்தான சுந்தரேசன்.

" சார்... சார்... இங்கே வாங்க... உங்க பேர் சுந்தரேசன்தானே ? கண்ணன் பிலிம்சுக்குத்தானே வர்றீங்க. புரொட்யூசரே சொல்லிட்டாரு. சுந்தரேசன்னு ஒருத்தர் கூலிங் கிளாஸ் போட்டுக்கிட்டு வருவாரு. உள்ளே விடாதே. ஒரு வாரம் கழிச்சு ஆபீசுக்கு வந்து பார்க்கச் சொல்லுன்னு சொல்லிட்டாரு சார்... நீங்க வேணுமின்னு எட்டாவது ப்ளோருக்குப் போன் போடுங்க" என்று சொல்லி போனைக் கையில் கொடுத்தான் அவன்.

அவமானம் பிடுங்க போனைக் கையில் எடுத்த சுந்தரேசனுக்கு, மறு முனையில் கண்ணன் சொன்ன வார்த்தைகள் மயக்கம் போடச் செய்தது.

"சுந்து... டோண்ட் ஒர்ரி... இந்தப் படம் இல்லேன்னு இன்னொரு படம்... மெட்ராஸ் ஐ வந்தவங்களோட சூப்பர் ஸ்டார் நடிக்க மாட்டாருப்பா... நாங்க அலப்பண்ணவும் கூடாது. ஒரு கால்ஷீட் வேஸ்ட்டானு லட்ச லட்சமா போயிடும்."

" கண்ணா... நான் என்ன சொல்றேன்னா, எனக்கு அப்படி ஒன்றும் இல்லேப்பா..."

"உன்னோட ஆர்வத்துலே நீ அப்படிச் சொல்லலாம்.... நான்தான் உங்க ஆபிசுக்கு அந்த நிமிஷத்துக்கு முன்னாலே போன் பண்ணிக் கேட்டேனே... மெட்ராஸ் ஐ வந்து லீவ் எடுத்துட்டுப் போயிட்டாருன்னு சொன்னாங்களே..."

பல்லை நறநறவென்றுகடித்துக் கொண்டே கூலிங் கிளாசைக் கழற்றி விசிறி எறிந்தான்.

ரோட்டில் வந்து விழுந்த அத்துடன் அவனது சினிமா கற்பனைகளும் தூளாகின.

கோவை அனுராதா

# துணிச்சலான கேள்விகள் துணைவேந்தரிடம்

துணிச்சலான கேள்விகள் துணைவேந்தரிடம்
துணிச்சலான கேள்விகள் துணைவேந்தரிடம்

சென்னைப் பல்கலைக் கழகக் கட்டிடத்தின் மாடியில் துணை வேந்தரது அறை. அகன்ற ஜன்னல்கள் வழியே வீசுகிற சுகமான கடற்காற்று. அமைதியான சூழ்நிலை. இன்றைய கல்வி நிலை, பல்கலைக் கழகத்தின் பிரச்னைகள் என்று பலவகையான நமது சூடான கேள்விகளைத் தொடுக்கிறோம் புதிய துணைவேந்தர் பி. பி. சுந்தரேசன் அத்தனை கேள்விகளுக்கும் ஆழ்ந்து சிந்தித்து நிதானமாய் மெல்லிய குரலில் ஆனால் அழுத்தம் திருத்தமாய்ப் பதில் சொல்கிறார்.

**நிருபர் :** இன்றைய கல்வியின் தரம் குறைந்து போய்விட்டதாய்க் குறை சொல்லப்படுகிறதே! இதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?

**பி.பி. சுந்தரேசன் :** இது ரொம்பத் தப்பு. ஒப்புக் கொள்ளமாட்டேன். தரம் கொஞ்சம்கூடக் குறையவில்லை; மாறாக உயர்ந்துள்ளது. அதுவும் இன்ஜினீரிங், மெடிகல் ஸயன்ஸ் பாடங்களில், தரம் மிக மிக உயர்ந்துள்ளது. சுமார் பத்து பதினைந்து வருடங்களுக்கு முன்னால் எந்த ஒரு கோர்ஸை எடுத்துக் கொண்டாலும் அப்போது அவர்கள் படித்த விஷயங்களைப் போல் பல மடங்கு இப்போது படிக்கப் படுகிறது. ஆனால் ஒரு விஷயத்தை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். நமது இப்போதைய கல்வித் தரத்தை மேற்கத்திய நாடுகளின் தரத்துடன் ஒப்பிடும்போது நம்முடையது குறைவுதான்.

**நிருபர் :** கல்லூரிகளில் புகுத்தப்பட்ட செமஸ்டர் முறை இப்போது வாபஸ் பெறப்பட்டுவிட்டது! இந்த செமஸ்டர் முறையின் நிறை, குறைகள் என்னென்ன?

**பி.பி.எஸ். :** செமஸ்டர் ஸிஸ்டம் என்பது அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் சிறப்பாய்ச்செயல்பட்டு வருகிற திட்டம். வருடம் இரண்டு செமஸ்டர்களாய்ப்பிரிக்கப் பட்டுப் பல்வேறு வழிகளிலும் ஒவ்வொரு மாணவனின் திறமையும் பரீட்சிக்கப்படும். ஒவ்வொரு ஆசிரியரின் பொறுப்பிலும் ஒரு சில மாணவர்களே இருப்பார்கள். இப்படியாக வருடத்துக்கு ஒரு தடவை தேர்வு வைத்து அதில் பாஸ் பண்ணினால்தான் புத்திசாலி என்று இல்லாமல், வருடம் முழுதும் மாணவர்களைக் கடுமையாய் உழைக்க வைத்து மதிப்பீடு செய்வது செமஸ்டர் ஸிஸ்டம். ஆனால் இங்கே வருடத்துக்கு ஒரு முறை என்பதற்குப்பதிலாக இரு முறை பரீட்சை நடத்தப்பட்டது. மற்றப்படி இன்டர்னல் அஸெஸ்மென்ட் முறை தோல்வியே. அதன் மீது ஏகப்பட்ட புகார்கள். ஆசிரியர்கள் ஒருதலைப் பட்சமாய்ச்செயல்பட்டதாய்க்குற்றச்சாட்டுகள். இதையெல்லாம் பார்த்து செமஸ்டர் ஸிஸ்டம் நமக்குச் சரிப்பட்டு வராது என்று கைவிடப்பட்டது.

**நிருபர் :** சில கல்லூரிகளுக்கு 'சுய ஆட்சி' (அடானமஸ்) தகுதி வழங்கப்பட்டுள்ளதே! அவை எப்படிச் செயல்படுகின்றன?

**பி.பி.எஸ். :** சுய ஆட்சி உரிமை அளிக்கப்பட்ட கல்லூரிகளின் தரம் நன்றாகவே இருக்கிறது. அது பற்றி எந்தவிதப் புகாரும் இல்லை. அடானமி வழங்குவது நல்லதுதான். ஆனால் இது எல்லாக் கல்லூரிகளுக்கும் வழங்கப்படக் கூடாது. பல பிரச்னைகளுக்கு இது வழிவகுக்கும்.

## ஊழல்காரர்கள் மீது உரிய நடவடிக்கை

கர்நாடகத்திலுள்ள ஷிமோகா நகரில் நடந்த நிகழ்ச்சி இது. அவ்வூர் நகராட்சி, நகரின் சுத்தத்தில் அக்கறை கொள்ளாமல் இருப்பதைப் பார்த்த பலர் அவர்களுக்குப் பாடம் கற்பிக்க ஒரு வழி செய்தார்கள். ஒரு பெரிய கூடை நிறைய குப்பையை நிரப்பி அதை ஒரு வண்டியில் வைத்துக் கொண்டு நகரம் பூராவும் வலம் வந்தார்கள். பிறகு குப்பையை நகராட்சி அலுவலகத்தில் கொண்டு போய்ப் போட்டார்கள்!

—அனிதா ராமச்சந்திரன்



நிருபர் : ஒவ்வொரு வருடமும், அட்மிஷன் சமயத்தில் ஏற்படுகிற பிரச்னை கொஞ்ச நஞ்சமில்லை. இதற்கு நிரந்தரமாய் ஒரு தீர்வுகாண முடியாதா?

பி.பி.எஸ். : நீங்கள் சொல்வது சரிதான். கல்லூரிகள் அரசாங்கத்தின் ரிசர்வேஷன் 'கோட்டா'வின் படிதான் அட்மிஷன் தர வேண்டும். இது கண்டிப்புடன் கடைப்பிடிக்கப்படுகிறதா என்பதே கேள்விக்குறி. டொனேஷன், சிபாரிசு என்று பல. இவைகளுக்கெல்லாம் யூனிவர்ஸிடியால் மட்டுமோ கல்லூரி நிர்வாகத்தில் மட்டுமோ, பெற்றோர்களால் மட்டுமோ தனியாய்த் தீர்வுகாண முடியாது. அனைவரும் ஒன்றாய்ச் சேர்ந்து பேசி விவாதித்து ஒரு முடிவு காண வேண்டும்.

நிருபர் : பரீட்சைகள் முடிந்து பல மாதங்கள் கழிந்தும்கூட ரிசல்ட் வெளியிடப்படுவதில்லையே. இந்த விஷயத்தில், பல்கலைக் கழகம் ஏன் இத்தனை சோம்பேறித்தனம் காட்டுகிறது ?

பி.பி.எஸ். : இத்தனை காலம் பரீட்சை முடிவுகள் வெளியிடுவதில் அபரிமிதமான காலதாமதம் இருந்து வந்தது உண்மைதான். இப்போது தேவையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுப் பரீட்சை முடிவுகள் பரீட்சை முடிந்து சுமார் எட்டு வாரங்களுக்குள் வெளியிட ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

நிருபர் : ரிசல்ட்களிலும்கூட ஏகப்பட்ட தவறுகள் சொல்லப்படுகின்றன. கம்ப்யூட்டர் மீது பழி போடப்படுகிறதே !

பி.பி.எஸ். : ஏகப்பட்ட தவறுகள் என்பதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். ஒரு லட்சம் மாணவர்கள் – ஒவ்வொருவரும் சுமார் 6 பாடங்கள் பரீட்சை எழுதுகிறார்கள் என்றால் கம்ப்யூட்டரில் மொத்தம் ஆறு லட்சம் மார்க்குகள் பதிவு செய்யப்படுகின்றன. இத்தனை 'டேடா'க்களையும் பதிவு செய்பவர் மனிதன்தானே! ஆங்காங்கே சில தவறுகள் நடப்பது சகஜம் தானே ? தவறுகள் அதிகபட்சம் ஒரு சதவீதம்தான். அதையும் குறைப்பதற்கு செக்கிங் கிராஸ் செக்கிங்குகள் மூலம் முயற்சிசெய்கிறோம்.

நிருபர் : தபால் வழியில் பட்டப் படிப்புகள் சொல்லித் தருவது ஒரு பெரிய பிஸினஸ் போல ஆகிவிட்டதே ?

பி.பி.எஸ். : முன்பெல்லாம் வேலையில் இருந்து கொண்டு மேலே படிக்க விரும்பியவர்கள் மட்டும் தபால் வழியில் படித்தார்கள். ஆனால் இன்று நிலைமை மாறிவிட்டது. கல்லூரிகளில் இடம் கிடைக்காத நிலையில் கரஸ்பாண்டென்ஸ் கோர்ஸில் சேர்ந்து படிக்க ஆரம்பித்துவிட்டார்கள். அதுவுமில்லாமல் நிறைய படிக்க வேண்டும் என்கிற பரவலான கருத்தும் நிலவுகிறது. இதனால்தான் கரஸ்பாண்டன்ஸ் கோர்ஸுக்கு ஏகப்பட்ட ரஷ். இதன் காரணமாக நிர்வாகத்தில் பாடங்கள் அனுப்புவதில், செமினார் வகுப்புகள் நடத்துவதில், பரீட்சைகள் வைத்து ரிசல்ட் வெளியிடுவதில் ஏகப்

பட்ட பிரச்சினைகள். இது பற்றி நாங்கள் ஸீரியஸாய் யோசித்து வருகிறோம்.

நிருபர்: கல்லூரிகளின் நிர்வாகம், பல்கலைக் கழகத்தின் கட்டுப்பாட்டின் கீழ் இல்லாததால், கல்லூரிகள் சரிவர நடப்பதில்லை என்று சொல்லப்படுகிறதே?

பி.பி.எஸ்.: பல்கலைக் கழகம் பாட சம்பந்தமான விஷயங்களில்தான் கவனம் செலுத்த வேண்டுமேயொழிய நிர்வாகத்தில் தலையிடக்கூடாது. பல்கலைக் கழகம் பாடத் திட்டம் அமைப்பது, பரீட்சைகள் நடத்துவது கால தாமதமின்றி முடிவுகள் வெளியிடுவது இவற்றில்தான் கவனம் செலுத்த வேண்டும் என்பது என் கருத்து. அதனால்தான் நிர்வாகத்தினைக் கவனிப்பதைக் கல்லூரிக் கல்வி இயக்குனரிடம் விட்டுவிட்டோம்.

நிருபர்: பல்கலைக் கழகத்தின் நிதி நிலைமை மிக மோசமாய் இருப்பதாகவும், கடன் வாங்கிய மிகப் பெரிய தொகையைத் திருப்பிக் கட்ட முடியாத நிலையில் இருப்பதாயும் பேசப்படுகிறதே!

பி.பி.எஸ்.: அது உண்மைதான். யூனிவர்ஸிடிக்கு இப்போது வருவாய் குறைந்து விட்டது. கல்லூரிகளில் பி.யூ.ஸி. இல்லை. பரீட்சைக் கட்டணங்கள்மூலம் வரும் வருவாய் சொற்பம். பல்வேறு நிறுவனங்களிடமிருந்தும் நிதி உதவி பெற்று நிதி நிலையை மேம்படுத்த என்னால் முடிந்தவரை செய்து கொண்டிருக்கிறேன்.

நிருபர்: உண்மையில் நடந்ததா இல்லையா என்ற விவாதத்துக்குப் போக விரும்பவில்லை: ஆனாலும் சிமெண்ட் ஊழல் போன்றவற்றால், பல்கலைக் கழகத்தின் இமேஜ் பாதிக்கப்பட்டுள்ளதை நீங்கள் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். மீண்டும் நல்லதொரு இமேஜ் கிடைக்க என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறீர்கள்?

பி.பி.எஸ்.: ஊழல் பற்றி ஆராயக் குழு அமைக்கப்பட்டுள்ளது. விசாரணை முடிவு வெளி வரட்டும். உண்மையில் நடக்கவில்லையெனில் பிரச்னை இல்லை. ஏதாவது நடந்திருக்குமானால், உரிய நடவடிக்கை தயங்காமல் எடுக்கப்பட்டு, இமேஜ் காப்பாற்றப்படும்.

நிருபர்: நீங்கள் உங்களுடைய பணிக் காலத்தில் புதிதாய் ஏதாவது செய்யத் திட்டமிட்டிருக்கிறீர்களா?

பி.பி.எஸ்.: இப்போதைய கல்வி முறையில் ரொம்ப ரொம்ப புத்திசாலிகளுக்கு, தனியாய் எந்தவித என்கரேஜ்மெண்டும் கிடைக்க வழியில்லை. இதை மாற்றி மிகத் திறமைசாலிகளுக்கு இன்னும் அறிவு வளர பல உதவிகளும் செய்ய ஆசைப்படுகிறேன். அடுத்தது நம் கல்லூரிகளில் பலவற்றுக்குச் சோதனைச் சாலைகள் வசதி போதாது. நவீன லாபரட்டரிகள் கல்லூரிகளில் அமைக்க வழி செய்ய வேண்டியுள்ளது.

பேட்டி: எஸ். சந்திரமௌலி

புகைப்படங்கள்: ஜெயமோகன்

## டாக்டர் பி. பி. சுந்தரேசன்



டாக்டர் பி. பி. சுந்தரேசன் (55) மதுரை மாவட்டம் கொம்பை கிராமத்தில் பிறந்தவர், விவசாயக் குடும்பம். பள்ளிக்கூடப் படிப்பு ஆந்திராவில். கிண்டியில் இஞ்சினீரிங். அமெரிக்கா ஃப்ளாரிடா பல்கலைக் கழகத்தில் பி.ஹெச்.டி. கிண்டியில் துணை புரொபசராய்ச் சேர்ந்து பின் புரொபசர். ஹாஸ்டலில் வார்டனாய் இருக்க அனுபவம் உண்டு. ஹாஸ்டலில் தங்கிப் படித்த, வசதியில்லாத மாணவர்கள் பலருக்குச் செய்த உதவிகள் ஏராளம்.

சுமார் 70 அறிவியல் ஆராய்ச்சிக் கட்டுரைகள் சமர்ப்பித்துள்ளார். இவற்றில் பரிசும் பாராட்டும் பெற்றவை பல.

உலகப் படத்தில் கண்ணை மூடிக் கொண்டு எங்கே கைவைத்தாலும், அந்த நாட்டுக்குப் போய் வந்திருப்பார் துணைவேந்தர் பி. பி. எஸ்.

கர்நாடக இசையில் நாட்டமுண்டு. தெய்வ பக்தி நிரம்பியவர். ஹாக்கி கிரிக்கெட்டில் ஆர்வம் அதிகம்.

நாலு பெண்கள். நெ. ஒன் — டாக்டர்; நெ. டு இன்ஜினீயர்; நெ. த்ரீ & ஃபோர் ஸ்கூல் (ஏர்காட்டில்).



○ தொடக்க விழா திலீப்குமார் விளக்கேற்றி வைக்கிறார்

இனிய வாசகர்களுக்கு,
தில்லியிலிருந்து ஜெயமன்மதன்.

தெருவோர நாய்கள் விறைத்துப் போய் வேறு பிறவி தேடிச் சென்றுவிட்ட குளிர் இங்கே. இருந்தும் குல்லாப் போட்டு, கம்பளம் போர்த்திய கார்ப்பரேஷன் ஆசாமிகள், மந்திரிகள் வரும் பாதைகளைப் பிடிவாதமாகச் சீராக்குகிறார்கள்.

குளிருக்கு நடுவே தில்லி மக்களை இந்தத் திரைவிழா ஒரு ஜுரம் போல் வந்து பற்றியிருக்கத் துவக்க விழா நடந்த விக்யான் பவனில் மூலைக்கு மூலை IFFI–10 என்று சுவர் உயர பேனர்கள். போஸ்டர்கள்.

Press — என்று போட்ட கவுண்டரில் கோட் ஆசாமி வேர்க்கடலை கொறித்தார். ஸ்வெட்டர் பெண் தொலைபேசியில் நூறு நிமிடங்களாக 'நோ, ரம்யா அமித் இஸ் நாட் கமிங்' என்று குலவ — நாங்கள் திருவிழாவில் தொலைந்த குழந்தைகள் போல எதிரில் நின்றோம்.

'ஐயா, பத்திரிகையாளருக்கு வாசல் எந்தப் பக்கம்?'

'முஜே பத்தா நஹி. கிஸீ அவுர்ஸே பூச் லோ.'

'மேடம்?'

'I don't know. Ask somebody else.'

சென்னையில் புறப்பட்ட போதே சகுனம் சரியில்லை. கிரான்ட்–ட்ரங்க் கரெக்ட் டயத்திற்குக் கிளம்பிவிட்டது. அதன் பலனா இது? என்று நொந்து கொண்டு பாட்ஜ் குத்திய மற்ற பத்திரிகை முகங்களைத் தொடர்ந்து போய், அது பாத்ரூமில் கொண்டுபோய் விட அசடு வழிந்து, பின்னடைந்து/ பிரதான ஹாலில் நுழைந்தால்—.

துவக்க விழாவைப் பற்றி ஆயிரம் வார்த்தைகள் விரயம் செய்து உங்கள் நேரத்தைக் கொல்வதற்கு முன் ஒரே ஒரு ஒற்றை வார்த்தை விமரிசனம் — வெட்கக் கேடு!

ஆங்கிலத்திற்கு தீப்தி நாவல், தேசிய மொழிக்கு ராஜ்பாபர் என்று இரண்டு அறிவிப்பாளர்கள். டேக்–2, டேக்–3 வசதியின்றி திணறி— நம்மூர் பள்ளிப் பையன்கள் இதைவிடப் பல மடங்கு சிறப்பாகச் செய்திருப்பார்கள்.

பிரபல திரைமுகங்கள் மேடையில் தோன்றுவார்கள்! (ஜோராகக் கைதட்டுங்கள் என்று சொல்லாதது மிச்சம்) என்று திடீரென்று தடாலடி அறிவிப்பாய் ஒன்றைச் செய்து—

ராஜ்கபூர், ராஜ்குமார், ராஜேஷ் கன்னா என்று ஆரம்பித்து தீப்தி நாவல் திருப்திக்கு ஒருவர், ராஜ்பாபர் திருப்திக்கு ஒருவர் என்று அழைக்கப்பட்டு மேடையில் ஏகப்பட்ட மூச்சுத் திணறல். 'ரவிசங்கரா வருக, அட

# பனிமழை பொழிந்த மாலையில்... உறைய வைக்கும் குளிரில்

## தில்லியில் திரை விழா



○ திரைப்பட விழா சின்னம்


○ ஜூல் — எ — ஜூம்

நம்ப பாஸுவா வாங்க வாங்க!'

இன்னும் கொஞ்சம் தலையைத்தூக்கியிருந்தால், 'தி கிரேட் ஜெயமன்மதன், ப்ளீஸ்' என்று அழைத்திருப்பார்கள்.

அயல் பிரதிநிதிகளுக்கிடையில் இந்திய மானம் பக்கெட் பக்கெட்டாய்க் கப்பலேறிய ஒரு அவமானப் பனி மாலை.

குத்துவிளக்கேற்றப்பட்டு, மந்திரி உரையாற்றப்பட்டு துவங்கிய இந்த விழாவில் பங்கேற்கும் தமிழ்ப்படம் ஒண்ணே ஒண்ணு. கண்ணே கண்ணு. அச்சமில்லே, அச்சமில்லே.

மசாலா நெடி வீசும் ஹிந்திப் படங்கள் பத்து. மலையாள இரவுப்படங்கள் ஐந்து. சுந்தரத் தெலுங்கு இரண்டு.

அரசியல் சிவாஜி அந்த நாளில் நடித்த படங்கள் நான்கு பொதுமக்கள் பார்வைக்காக. நாங்கள் தமிழ்நாட்டை ஒதுக்கவேயில்லையே என்று ஆள்காட்டி விரலை ஆட்டி ஆட்டிச் சும்மா ஒரு உளாக்கட்டி காட்டுவதற்காக.

தயவு செய்து ஃபோட்டோ கிராபர்கள் இடத்தைக் காலி செய்யவும்—
தயவு செய்து சினிமா நட்சத்திரங்கள் ஆட்டோகிராஃப் ரசிகர்களைத் தவிர்க்கவும் — ஹலோ ஃபோட்டோ கிராபர்ஸ், வில் யூ ப்ளீஸ் கோ அவுட்— ஆகிய தலையாய அறிவிப்புக்களுக்கிடையே—

பரபரப்புகள், ஸெண்ட் மணங்கள், உரசல்கள், ஓடல்கள், போஸ்கள், flash-கள் குழப்பங்கள், கூச்சல்கள்.

## ஜூல்—எ—ஜூம் (ஃப்ரெஞ்ச்)

'கூடியிருக்கிற மஹா மஹா ஜனங்களே, எல்லாரும் அப்படியே உட்காருங்க. சின்னப்பசங்க ஜோராக் கையைத் தட்டுங்க. நம்பளை சும்மா தாயத்து விக்கிறவன்னு கேவலமா நெனைக்காதீங்க... கதை சொல்றேன் ப்ரெஞ்ச் கதை கேட்டுக்கோ. யாராவது இங்க அம்மணமா ஆடுவான்னு நெனைச்சிக்கினு வந்தே நீ பேஸ்து அடிச்சிக்கினுப் பூடுவே. காதரீன் காதரீன்னு ஒரு பொண்ணு. அதும் மனசு அப்படித்தான். எப்பவுமே அல்லாடற மனசு. இந்தப் பொண்ணு வாள்க்கையில ரெண்டு தோஸ்துங்க, ஜூல், ஜூம்னு வந்து குறுக்காட்டுறானுங்க. சாதா தோஸ்துங்களா இல்லே. இவன் சாப்ட்டா, அவன் ஏப்பம் வுடுவான். இவங்க ரெண்டு பேர் சேர்றதுனால காதரீன் வாழ்க்கைல என்னு என்னு பிரச்னைங்க வருமின்னு சிகரெட் பாக்கிட்டை ஒண்ணு மேல ஒண்ணு வெக்கறு மாதிரி அடுக்கிக்கினே போவுது கதை. இன்னு பேஜாரா இருக்குதா. வுடு. நம்பளுக்கும் பேஜார்தான். இன்னு ஒரே ஒரு நல்ல பாயின்ட்டு, பசங்களையும், பொண்ணையும் படத்தில பாக்கறுப்பல இல்ல. நெஜமாலுமே பாக்கறுப்ல இருக்குது. அவ்வளவுதான். டைரக்டரு மண்டையைப் போட்டுட்டாராம்... இன்னு பேர்டா பையா?'

'ஃப்ரான்கா — த்ருஃபோ'

'சொல்லாதே இன்னொரு தாட்டி. வாயில நொளையாது. சின்னப் பசங்கள்லாம் ஜோராக் கை தட்டுங்க. போவாதே சார். இன்னொரு கதை சொல்றேன் கேளு...'

**—இந்த வாரம் இதற்குமேல் தாங்காது என்பதால் குறுக்கிடுவதற்கு மன்னிக்கவும். மீதியை அடுத்த வாரம் பார்க்கலாமே.**

**—ஆசிரியர்.**

○ செய்தி ஒலிபரப்பு உதவி அமைச்சர் வி. என். காட்கில்



**— ஜெயமன்மதன்**


ஷா
இறங்கித் தொலை போதும்!
காஷ்மீர் மக்கள்


ஒரு கை கொடுங்க.. இந்த ஆளை இறக்கி விட்டுடலாம்!
ஃபரூக்




மூப்பனார்
தலைவா.. தம்பி... தமிழ் நாட்டில் இ.காங்கிரஸ் ஆட்சி மலரும்! மலரும்!


வைஜயந்தி (எம்பி)


ஜெயலலிதா
முதல்வருக்குப் பெண்பால் என்னங்க?





கல்கி

1985 ஜனவரி 20
மலர் : 43 இதழ் : 25
ரக்தாக்ஷி தை 7



# யுத்த கால முயற்சி தேவை!

''இந்தியப் பண்பாட்டின் ஒரு சின்னமான கங்கையைப் புனிதப் படுத்தப் போகிறேன்'' என்றார் பிரதமர். இந்தியா தேசம் முழுவதுமே இன்று ஒரு லஞ்ச ஊழல் சாக்கடையாகத்தான் இருக்கிறது. கங்கையைப் பரி சுத்தமாக்க வேண்டும்தான். கூடவே பாரதத்தையும் துப்புரவாக்க வேண்டும்.

தேர்தல் அறிக்கையிலேயே பல வாக்குறுதிகளை வாரி வழங்கிய ராஜீவ், தேர்தலில் மகத்தான் வெற்றிபெற்ற பிறகு பிரதமர் என்ற முறையில் முதல் வானொலிப் பிரசங்கத்தில் மேலும் பல உறுதி மொழிகளை அளித்திருக்கிறார்! கங்கையைத் தூய்மைப் படுத்துவதில் தொடங்கி, நிர்வாகத்தை முடுக்கி விட்டு முனைப்புடன் செயலாற்றச் செய்வது வரை பல கருத்துக்களை மக்க ளிடம் பகிர்ந்து கொண்டிருக்கிறார். அழகிய இந்தியா என்று வியந்தார், ஜாதிமத பேதங்களை ஒழிப்போம் என்றார், ஏழைமை மீது போர் தொடுப் பேன் என்று சபதம் செய்தார். இன்னும் பொதுத் துறை, கல்வி, அயல்நாட்டு விவகாரங்கள் என்று பல துறைகளில் தாம் சாதிக்க எண்ணியிருப்பதைப் பட்டியல் போட்டார்.

இவருக்கு முன்பிருந்த பல பிரதமர்களின் அணுகுமுறைக்கும், ராஜீ வின் அணுகுமுறைக்கும் அதிக வித்தியாசமில்லை என்பதைக் காண்கிறோம். இப்படி அகலக் கால் வைத்து ஏகப்பட்ட உறுதிமொழிகளை வழங்கி மக்க ளிடம் பிரமாதமான எதிர்பார்ப்புகளைத் தூண்டி விடுவது சரியா? இளைஞர், துடிப்பானவர், கறைபடாதவர், நேருவின் வாரிசு, செய்து காட்டுவார் என்று மக்கள் நம்புகிறார்கள். அவர்கள் நம்பிக்கை வீண்போகாதிருக்குமா?

ஏகப்பட்ட விஷயங்களில் கவனம் செலுத்தி எல்லாவற்றையும் செய்ய முயன்று, எதையுமே சரிவரச் செய்ய முடியாமல் தவிப்பதைவிட, குறிப்பாக ஒன்று அல்லது இரண்டு அம்சங்களை மட்டும் எடுத்துக் கொண்டு இலக்கு நிர்ண யித்து அடுத்த தேர்தலுக்கு முன்பாக இவற்றை நிறைவேற்றுவேன் என்று கூறி வெற்றியும் பெறுவது புத்திசாலித்தனமாக இருக்கும். உதாரணமாகக் கல்வி, வேலைவாய்ப்பு என்ற இரு அம்சங்களை மட்டும் எடுத்துக் கொண்டு அவற் றுக்குச் சிரமசாத்தியமான இலக்குகளை நிர்ணயிக்கலாம். வாழ்க்கைக்குப் பயன்படும் அர்த்தமுள்ள கல்வியும் பட்டதாரிகளுக்கும் மற்றவர்களுக்கும் குறைந்த பட்ச ஊதியத்துடன் வேலைவாய்ப்பும் கிடைக்குமானால் மக்களுக்கு அதைவிட மகிழ்ச்சி தரக் கூடியது எது? இப்படி இரு அம்சங்களை மட்டும் எடுத்துக் கொண்டு யுத்தகால நெருக்கடி போல் தீவிரமாகச் செயல்பட்டால் பலன் இருக்கும். பசுமைப்புரட்சி போல் இதையும் வெற்றிபெறச் செய்ய வேண்டும். அரசாங்கத்தின் நிதி, ஆள் பலம் முழுவதும் இவ்விரு இலக்குகளை எட்டிப் பிடிக்கவே பயன்படுத்தப்பட வேண்டும். நாட்டிலுள்ள நல்லறிஞர் சிந்தனையெல்லாம் இதுபற்றியே இருக்கவேண்டும். யுத்தத்தில் எதிரியை ராணுவம் பரவலாக முன்னேறித் தாக்காது. ஓரிடத்தில் மட்டும் தீவிரத் தாக்குதல் நடத்தி எதிரி அணியைப் பிளவுபடுத்தும். அப்படித் தளபதி ராஜீவ் நவீன கொள்கைகள் என்ற ஆயுத பலத்துடன் ஓரிரு அம்சங்களை மட்டும் தாக்கிப் பிளவு ஏற்படுத்தினால் பின்னர் மற்ற எதிரிகளைச் சுற்றி வளைப்பது எளிது. அடுத்த ஐந்தாண்டுகளில் வேறு இரு அம்சங்களில் முழுக்கவனம் செலுத்தலாம்.

முப்பத்தேழு ஆண்டுகளுக்குப் பிறகு இன்னமும் ஏழைமையை ஒழிப் போம் என்றும் ஏழைகளின் கட்சி, ஏழைகளின் வேட்பாளர் என்றும் கோஷங்கள் எழுப்பிக் கொண்டிருப்பது வெட்கக்கேடு. இனியேனும் நல்வாழ்வு அமைப்போம் எனவும் வாழ்க்கைத்தரம் உயர்த்துவோம் என்றும் கோஷங்கள் அமைய வழிபிறக்கட்டும்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்



# பாட்டிக்கு நன்றி

## வளர்பிறை

அவளுக்கு அப்போது மூன்று வயது. அவள் எல்லாக் குழந்தைகளையும் போலத்தான் இருந்ததாகத் தோன்றியது பெற்றோருக்கு. ரேடியோவில் பாட்டு கேட்டால் அவளுடைய சின்னக் கால்கள் தாளம் போட ஆரம்பித்து விடும். நாட்டிய நிகழ்ச்சிகளைப் பார்த்து விட்டு வந்து வீட்டில் தானும் குதித்து ஆடுவாள். ஒரு முறை கலாக்ஷேத்ராவின் இராமாயண நாட்டிய நாடகத்தின் எல்லாப் பகுதிகளையும் கண்கொட்டாமல் சில நாட்களுக்குப் பார்த்தாள். வீட்டுக்கு வந்ததும் ஒரு துண்டை எடுத்து மேலாக்குபோல் சுற்றிக் கொண்டு, பாட்டி திருமதி ஜானகி கிருஷ்ணனை இழுத்து உட்கார வைத்து ஒவ்வொரு காட்சியாக ஆடிக் காண்பித்தாள். குழந்தை ஸ்ரீநிதியின் ஞாபக சக்தியைக் கண்டு வியந்தனர் பாட்டியும் பெற்றோரும்.

ஞாபக சக்திக்கும் மேலாக ஒரு வரப் பிரசாதம் ஸ்ரீநிதியிடம் இருப்பதைப் புரிந்து கொண்டு அதை அவள் குடும்பத்தாருக்கு உணர்த்தியவர் நெருங்கிய நண்பரான நடனமணி திருமதி கமலா. ''எத்தனையோ விஷயங்கள் சொல்லிக் கொடுத்து வரலாம். ஆனால், தாள ஞானம் இருக்கு பாருங்கள், அது லேசில் வந்துவிடாது. நம்ம முத்துவுக்கு (ஸ்ரீநிதியை அப்படித்தான் அழைப்பார் கமலா) அது இயற்கையாகவே அமைஞ்சிருக்கு. அவளை என்னிடம் விடுங்கள்'' என்றார் திருமதி கமலா.

○ அகாடமி பார்வையாளர்கள் அசந்தனர்

'இது என்னடா தர்மசங்கடம்! மூன்றே வயதான குழந்தைக்குப் பரத நாட்டிய வகுப்பா? கால் வளைந்து போய்விடுமே!' என்று கவலைப்பட்டனர் மருத்துவப் பெற்றோர்களான டாக்டர் ரங்கராஜனும் திருமதி வஸந்தி ரங்கராஜனும். திருமதி கமலாவின் சொல்லைத் தட்ட முடியவில்லை. ஸ்ரீநிதியின் ஆர்வத்தையும் கட்டுப்படுத்த முடியவில்லை. கமலாவின் இடுப்பில் உட்கார்ந்து கொண்டு அவர் கையால் உணவு அருந்தியபடியே பாட்டுக் கேட்டாள் ஸ்ரீநிதி. தோட்டத்தில் விளையாடிக் கொண்டே பரதம் பயின்றாள். நாளடைவில் விளையாட்டுப் போக்கு மாறிக் கவனமாக நாட்டியம் கற்றுக் கொண்டாள்.

ஐந்தாவது வயதில் ஸ்ரீநிதியை அரங்கேற்றி விட்டார் கமலா. சாகுந்தலம் நாட்டிய நாடகத்தில் பரதன் பாத்திரத்தை ஏற்கச் செய்தார். மாலை ஏழு மணிக்கெல்லாம் தூங்கி விடும் பழக்கமுடைய குழந்தை எப்படி விழித்துக் கொண்டிருக்கப் போகிறாள் என்று வீட்டாருக்குக் கவலை. ஆனால் அன்று ஸ்ரீநிதி எல்லோரும் வியக்கும் வண்ணம் ஆடியதோடு திரை மறைவில் நின்று கொண்டு எந்தெந்த காட்சியில் யார் யார் மேடையில் தோன்ற வேண்டும் என்று குழுவினருக்கு நினைவூட்டிக் கொண்டிருந்தாள். கமலா பூரித்துப்போனார். விமர்சகர்கள் வியந்து பரதன் புகழ் பாடினார்கள். ரசிகர்கள் கதுப்புக் கன்னங்களை அள்ளி முத்தமிட்டார்கள். பாட்டி திருஷ்டி சுற்றிப் போட்டார். பெற்றோர்களோ பெருமிதத்தில் விம்மிய அதே நேரத்தில் தங்கள் பொறுப்பு மிக மிக அதிகமாகி விட்டதை உணர்ந்தார்கள்.

ஏழாவது வயதில் ஸ்ரீநிதியைத் தனியே அரங்கேற்றிவிட்டார் கமலா. அன்று ஆரம்பித்து இன்றுவரை நூற்றுக்கு மேற்பட்ட தனி நிகழ்ச்சிகள் வழங்கியுள்ளார் ஸ்ரீநிதி ரங்கராஜன். என்றாலும் சென்ற மாதம் மியூசிக் அகாடமியின் புதுப்பிக்கப்பட்ட அரங்கில் முதல் நாளன்று ஆடக் கிடைத்த வாய்ப்பு அவரது ஆற்றலுக்கு மிகப் பெரிய சான்றிதழாக விளங்கியது. அன்று புதிதாக ஸ்ரீநிதி நடனத்தைக் காணக் காத்திருந்தவர்கள், 'பெயர் நன்றாகத்தான் இருக்கிறது ஸ்ரீநிதி என்று. கலைச் செல்வத்தையும் நிதி

○ பெருமையில் பெரும்பங்கு சுவாமிமலை ராஜரத்தினத்தையே சேரும்





யாகப் பெற்றிருக்க வேண்டுமே' என்று ஒரு வித அலட்சியத்துடன்தான் அமர்ந்திருந்தார்கள். ஆனால் ஸ்ரீநிதி ஆட ஆரம்பித்த ஓரிரு நிமிஷங்களில் நிமிர்ந்து உட்கார்ந்தவர்கள்தான். கடைசி வரை ஒரே பிரமிப்பு! அந்த வர்ணத்தை ஏற்கெனவே பாலா கையாண்டு பார்த்தவர்கள்கூட இன்று ஸ்ரீநிதி ஆடக் கண்டு சொக்கிப் போனார்கள்! தங்களை மறந்து ஆஹாகாரம் செய்தார்கள். வழி மறைத்திருக்குது பாடலுக்கு அபிநயித்த போது ஸ்ரீநிதியுடன் சேர்ந்து தாங்களும் உருகினார்கள். ஒவ்வொரு நிகழ்ச்சி முடிந்து திரையிட்ட பிறகுதான் சுய உணர்வு பெற்று இடிமுழக்கம்போல் கரகோஷம்செய்தார்கள்.



○ கமலாவின்...

சாந்தம் ததும்பும் அழகிய முகம், நொடிப் பொழுதில் உணர்ச்சி பாவங்களைக் காட்டக் கூடிய உயிரோட்டம் நிறைந்த கண்கள், எடுப்பான நாசி, செதுக்கியது போன்ற அதரங்கள், அளவான உயரம், உடற்கட்டு, மிகையில்லாத அலங்காரம் — இவை ஒருங்கிணைந்து பாவமும் தாளமும் கச்சிதமாய் அமையப் பெற்று இவர் நாட்டியத்துக்கு அழகு செய்கின்றன. அரங்கு முழுவதையும் ஆக்கிரமித்து ஆடும் லாகவமும், சிக்கலான ஜதிகளையும் அநாயாசமாய்க் கையாளும் திறமையும் நம்மை அசத்துகின்றன. இன்று பரத நாட்டியத்துக்குள் மெல்ல மெல்ல புகுந்து வரும் சினிமாத்தனத்தை இவர் நாட்டியத்தில் எள்ளளவும் பார்க்க முடியாது. தூய்மையான, சாஸ்திரீய நடனத்தின் பிரதிநிதியாகத் திகழ்கிறார். இதனால் இவரது நடனத்தில் புதுமையே இல்லை என்று முடிவு கட்டி விடக்கூடாது. அடவுகள், அசைவுகள், பாத வேலைகள் முதலியவற்றில் ஆங்காங்கே புது மலர்களாகப் புதுமைகள் பூக்கக் காண்கிறோம். உதகை பூங்காவில் பார்க்கக்கூடிய வித்தியாசமான பல வகை மலர்கள் போல் புதுப் புது கற்பனைகளைக் கண்டு ரசிக்கிறோம். ஆயினும் அவ்வளவும் மரபு சற்றும் மீறாத கட்டுப்பாட்டுடன்கூடிய புதுமைகள். பாதங்கள் சிறப்பாகப் பேச, கரங்கள் நிருத்தமாகச் செயல்பட, அதே சமயம் விரைப்பில்லாத நளினத்தையும் உணரும்போது 'எப்படி இது சாத்தியமாகிறது?' என்று வியக்கிறோம். ஒரு பிசிறு இல்லை. ஒரு உறுத்தம் இல்லை.

இந்தப் பெருமைகளில் பெரும் பங்கு குரு சுவாமிமலை திரு ராஜரத்தினத்தையேசேரும்.

கமலா வெளிநாடு சென்றது முதல் ஸ்ரீநிதி இவரிடம் பயிற்சியைத் தொடர்ந்து வருகிறார். 'பாத்திரமறிந்து பிச்சையிடு' என்பார்கள். கலைச் செல்வத்தை வழங்குகிற ராஜரத்தினம் அதைப் பெறுகிற பாத்திரம் முற்றிலும் தகுதியுடையதுதான் என்று பெருமை கொண்டிருக்கிறார். ஸ்ரீநிதிக்கு இயற்கையாகவே உள்ள கலை ஆர்வத்தையும் தாள ஞானத்தையும் பாவங்களைப் பொழியும் திறமையையும் குரு புரிந்து கொண்டிருப்பதால் இருவருக்குமிடையே அச்சமற்ற சுவாதீனமான ஒரு குரு–சிஷ்யை உறவு நிலவுகிறது. இளம் தலைமுறைக் கலைஞரான ஸ்ரீநிதிக்கு இது பெருதவியாய் இருக்கிறது.

ஒரு நடனக் கச்சேரி சிறப்பதற்கு நடனமணியை விட ஒரு மாற்று அதிகமாகவே இசைக் குழுவினரின் ஒத்துழைப்பு காரணமாகிறது. மேடையில் ராஜரத்தினத்துக்கு பக்கபலமாக அமர்ந்து பாடுபவர்கள் மதுரை திரு டி. சேதுராமன், ஸ்ரீமதி சீதா சுப்பிரமணியம் ஆகியோர்.

பரதத்தில் சதம் கண்டுள்ள ஸ்ரீநிதி படிப்பிலும் முதன்மையாகவே திகழ்கிறார். சென்னையின் பிரபல கான்வென்ட் ஒன்றில் பத்தாம் வகுப்பு படிக்கும் இவர் எல். கே. ஜி. வகுப்பிலிருந்து ஒரு முறைகூட முதல் ராங்கை சக மாணவிகளுக்கு விட்டுக்கொடுத்ததில்லை! பிளஸ் டூவில் என்ன பாடம் தேர்ந்தெடுக்கப் போகிறார்? பெற்றோர்களைப்போல் மருத்துவ

..நடனம்





அவன்: அந்த வீட்டிலே 'ஆல் அவுட்'டா? எப்படி?

இவன்: தேர்தல் ரிசல்ட்லே அவர் அவுட். லாட்டரி ரிசல்ட்லே அம்மா அவுட் பரீட்சை ரிசல்ட்டில் மகன் அவுட்.

-வீ. ராமலிங்கம்

---

ராகப் போகிறாரா? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பதிமூன்று வயது ஸ்ரீநிதியின் மனத்தில் இன்னும் பதில் உருவாகவில்லை. இப்போதைக்கு நாட்டியத்தில் தீவிரம். படிப்பில் அதி தீவிரம்.

திருமதி கருணா புருஷோத்தமனிடம் கர்நாடக சங்கீதம் பயின்றுவரும் ஸ்ரீநிதி ஓரளவுக்கு ராகம், ஸ்வரம் பாடும் தேர்ச்சி பெற்றுள்ளார். ஓவியம் தீட்டுவதிலும் ஆர்வம் உண்டு. லாயலா ஆர்ட்ஸ் கிளப் நடத்திய அனைத்துப் பள்ளி ஓவியப் போட்டியில் தங்கப் பதக்கம் பெற்றுள்ளார்.

ஆனால் ஸ்ரீநிதியின் பிராதான்ய பட்டியலில் முதலிடம் படிப்புக்கே தரப்பட்டுள்ளது. ''மியூசிக் அகாடமி நிகழ்ச்சி அற்புதமாய் அமைந்திருந்தது என்று எல்லாரும் பாராட்டினார்கள். சரி. ஆனால் மறுநாள் நடக்கவிருந்த அரையாண்டுத் தேர்வை எண்ணி அவள் பட்ட கவலை எங்களுக்கல்லவா தெரியும்!'' என்கிறார்கள் அவர் பெற்றோர்கள். நாமோ, ''படித்துப் பட்டம் பெற பல்லாயிரக்கணக்கானவர்கள் இருக்கிறார்கள்; இப்படி ஓர் உயர்ந்த கலைச் செல்வத்தை வாரி வழங்க அற்ப சொற்பம் பேர்தானே இருக்கிறார்கள்?'' என்று பதிலுக்குக் கேட்கிறோம்.

ஸ்ரீநிதியோ, ''இதை முதலில் புரிந்து கொண்டவள் என் பாட்டிதான்!'' என்கிறார். ஆம், குழந்தையிடம் உள்ளூற இருந்த அபார ஆற்றலை உணர்ந்து குற்றாலம் அருவியாக அன்பைச் சொரிந்ததுடன் பிடிவாதமாகவும் இருந்து திறமையை வெளிக்கொணர்ந்து பொது உடைமையாக்க அரும்பாடுபட்டவர் ஸ்ரீநிதியின் பாட்டிதான்! எனவே, பாட்டிக்கு நமது நன்றி!

-சிதாரவி

(இவ்விதழ் மேலட்டையை அலங்கரிக்கிறார் ஸ்ரீநிதி.)

---



## காமாக்ஷி — ரமேஷ்

கல்கி நிறுவனத்தின் முன்னாள் நிர்வாக இயக்குனர் திரு. ஆர். அனந்தநாராயணன் அவர்களின் புதல்வி செளபாக்கியவதி காமாக்ஷிக்கும் பம்பாய் ஐ. ஐ. டி. கல்விக்கூடத்தில் பேராசிரியராகப் பணியாற்றும் திரு. ஆர். மல்லிகார்ஜுனனின் புதல்வன் செல்வன் ரமேஷுக்கும் அண்மையில் திருமணம் மிகச் சிறப்பாக நடந்தேறியது.

முதல்நாள் மாலை நிச்சயதார்த்தத்துக்குப் பிறகு செம்மங்குடி ஸ்ரீ சீனிவாச அய்யர் அவர்களின் கச்சேரியும் திருமண தினத்தன்று வரவேற்பின்போது ஸ்ரீ டி. வி. சங்கர நாராயணன் அவர்களின் கச்சேரியும் அற்புதமாக அமைந்து விருந்தினர்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தின.

முகூர்த்தத்தின் போதும் மாலை வரவேற்பின்போதும் பிரமுகர்களும், நண்பர்களும் பெருமளவில் கலந்து கொண்டு தம்பதிகளை ஆசீர்வதித்தனர்.

பம்பாய் ஐ. ஐ. டி. வளாகத்தில் ஜனவரி 7–ம்தேதி மாலை மணமகன் இல்லத்தில் பம்பாய் பிரமுகர்கள் பலர் பங்கேற்ற வரவேற்பு வைபவம் கோலாகலமாக நடந்தேறியது.

வாழ்க, காமாக்ஷி —ரமேஷ்! வாழ்க பல்லாண்டு!

வெள்ளித்திரை

முதல் நாள் மாலையில் சந்திரோதயம் ஆலவுடன் தியேட்டர் படியில் காலை வைக்க ஜெய மன்மதன் முயன்றபோது முதற்படியில் காவலாக இருந்த மதனபிஷேகப் பதுமை இரு கை கொட்டித் தலையசைத்து நகைத்துச் சொல்லியதாவது :

''அகோ! வாருமையா. ஜெய மன்மதரே! நில்லும் நில்லும் ! முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டது போல் இத் தியேட்டரில் நுழைந்து படம் பார்க்க விரும்பினீர். இப் பொங்கல் படங்களைக் காண உமக்கு என்ன தகுதியிருக்கிறது? பொறுமை, கேள்வி கேளாமை, சகிப்புத் தன்மை முதலியன உமக்கு இருக்கிறதா ? முதல் கதையைச் சொல்கிறேன் கேளும், அதன்பின் நீர் தகுதியுடையவராய் இருந்தால் அடுத்த படிக்குப் போவீராக'' எனச் சொல்ல, ஜெய மன்மதனும் மிக வினயமாகச் செவிமடுக்கத் தொடங்க—



# பதுமைகள் சொல்லிய படக்கதைகள்

## மதனபிஷேகப் பதுமை சொல்லிய அந்த இரவு

''அகோ! கேளுமையா, நாம் அந்த நாள் பாஷையில் சொன்னால் உம் செவியில் எம் மொழிகள் ஏறு என்னும்படியால் நான் இந் நாள் முறைப்படி கதையினைச் சொல்லி வைக்கிறேன்.

தலைப்பே ஒரு மாதிரி சொல்லிவிடுகிறது, இது ஒரு மர்மக் கதை என்று. ஆம், அப்படித்தான். ஆனால் மர்மத்திற்கு மையமாகும் நிகழ்ச்சியைத் தெரிந்து கொள்ள எத்தனை நீண்ட நெடும் பயணம் ?

படகு, வண்டி, கார், காலேஜ்—டேபாட்டு என்று மறுபடி மறுபடி வண்ணங்களையும் இளசுகளையும் கலந்து கலந்து காட்டினாலுங் கூட படம் நகர்வதென்னவோ ஆமை வேகம், நத்தை வேகம்தான்.

கதாநாயகி, ஒரு கொலையைத் தற்காப்புக்காகச் செய்ய, காரியஸ்தர் அதை மறைக்க, டிரைவர் பார்த்துவிட்டு பிளாக் மெயில் செய்ய, கதாநாயகியின் நாயகன் நடுவில் புகுந்து, அம், உதை குத்துகளுக்கு இடையில் அசல் கொலையாளியைத் தீர்த்துக் கட்டும் அந்த இரவு.

மலையாளத்திலிருந்து தமிழில் மொழி பெயர்த்திருப்பதாலோ என்னவோ தமிழ்ப் பாடல்களில், மதுரம், ராஜஹம்ஸம் போன்ற புரிகிற இரண்டொரு வார்த்தைகளைத் தவிர மற்ற எல்லா. வார்த்தைகளுமே ஈச், மூச், ஈச், மூச்தான்.

அட, ஒருதலை ராகம் சங்கர் ! மலையாளத்தில் நடிக்கிறாரா என்ன?

ராதா என்றொரு ஷோ கேஸ் பொம்மை வருகிறது. மழையில் நனைகிறது. டூயட் பாடுகிறது. கொலைக்கு அப்புறம் பிரதிபலிக்கும் அந்தப் பய உணர்ச்சிகள் மட்டும் பரவாயில்லை ரகம்.

காரியஸ்தராய் நடித்தவர் யாரோ, எவரோ — மனிதர் அண்டர் ஆக்ட் செய்ய வேண்டும் என்று எண்ணி ரொம்பவுமே அடக்கி வாசித்துவிட்டார். காரியஸ்தருக்கு ஒரு இடத்தில் மழமழவென்று ஷேவ் செய்யப்பட்ட முகம். அடுத்த காட்சியில் ஒட்ட வைத்த தாடி. அவர் மீது சந்தேகம் வர வேண்டுமென்று செய்திருந்தால் கதைக்கு ஒத்துக் கொள்ளாத விஷயம். ஊஹூம், அப்படி இல்லை என்றால் புரிபடாத புதிர்.

பிணத்தை ஃப்ரிட்ஜிலிருந்து எடுக்கும் போது பனி தடவப்பட்ட முகத்தைப் பார்க்கும் போது படபட. நல்ல மேக்கப்.



சிலுக்கு இருக்கிறார். அவரும் டிரைவரும் கட்டிப் புரளும் இடம் ஆபாசம் என்ற வார்த்தைக்கு ஒரு படி மேலே — என்பது அறுபதை மீறினவர்கள் கட்சி. அடடா, ஜிலுஜிலு வென்று சப்புக் கொட்டுவது இருபதை இப்பொழுதுதான் தொட்டவர்கள் கட்சி. சிலுக்கின் டான்ஸூம் டிட்டோ.

மர்மப் படம்தான். திகில்தான். படபடக்கும் நிகழ்ச்சிகள்தான். இருந்தும் உப்பில்லாத சாம்பார் மாதிரி சப்பென்றிருக்கிறது.

## மதனாபிஷேகப் பதுமை சொல்லிய ராஜாத்தி ரோஜாக்கிளி

சிரிப்பு நடிகரே வில்லனாகவும் இருந்து விட்டால் எப்படி இருக்கும்? பிஸ்தாவும், வெனிலாவும் சேர்ந்த மாதிரி இருக்கும் என்று நிரூபித்திருக்கிறது படம்.

சொத்துத் தகராறு. அதனால் இரண்டு கொலைகள். கொலை செய்யப்பட்ட கதாநாயகன் ஆவியாக வந்து பழி வாங்கும் கதை என்றவுடன் இளக்காரமாகப் பார்க்க வேண்டும் என்று பொருளல்ல. கதையை அட்டகாசமாகச் சொல்லியிருக்கிறார்கள் அழகான கிராமப் பின்னணியில்.

ஈசான்ய மூலையில் புதையல் தோண்டும் போதே புரிந்து விடுகிறது, கவுண்டமணி காரெக்டர். வெற்றிலை பாக்கு பார்ப்பதென்ன, தேங்காய் அகப்படுவதென்ன, அப்புறம் புதையல் கிடைக்கு முன்பே மனோரமா 'என் இடுப்புக்கு ஒரு ஒட்டியாணம்' என்று அடிபோடுவதென்ன, 'அதென்னடி வண்டிச் சக்கரமாட்டம் கையைச் சுத்தறே' என்று பொருமிவிட்டு கவுண்டமணி கையைவிட்டுத் தோண்டி எடுக்கும் புதையல், பக்கத்து வீட்டு பூசாரி. கலகலக்கிறது.

படம் நெடுக அழுத்தமான வசனங்கள். வசனம் எழுதியிருக்கும் கிருஷ்ணனுக்கும் ஓர் அழுத்தமான பாத்திரம். முதல் படமாம் நடிப்புக்கு — பார்த்தால் தெரியவேயில்லை.

சுலக்ஷணா ராஜேஷைப் பார்த்து முகத்தைத் திருப்பி ஒரு வெட்க நொடி நொடிக்கிறாரே க்ளாஸ். ராஜேஷ் மட்டும் சளைத்திருக்கிறாரா என்ன? மாமா, அத்தையிடம் பூனையாய் ஒதுங்குவதும், சுலக்ஷணாவைச் சீண்டுவதும், எதிரிகளிடம் பாய்வதும், பேயாய் முகத்தை விறைத்துக் காட்டுவதும் என்று ஜமாய்த்திருக்கிறார்.

அவருக்கு சீம்பால் புடிக்கும்னா இவருக்கு என்ன புடிக்கும் என்று கணக்கு போடும் செந்தில் கடைசி வரை கணக்குப் போடுவதோடு சரி. ஆனால் அந்த மூக்கால் வழுக்கையையும், பீப்பாய் உடலையும், உருட்டைக் கண்களையும் பார்த்தாலே சிரிப்பு பொத்துக் கொண்டு வருகிறது.

கட்டிக்க வேஷ்டி வெச்சிருக்கீங்களா என்று மனோரமா உதறுவது, பேயைப் பார்த்து அலறுவது, கவுண்டமணி, மனோரமா, செந்தில் என்று மூன்று பேரும் உட்கார்ந்து பயத்தைப் போக்க பாட்டுப் பாடுவது — ரொம்ப நாளைக்கப்புறம் நம்மை அறியாமலேயே ஹா ஹா ஹா என்று சிரிக்க வைத்திருக்கிறார்கள்.

டைரக்ஷன் தேவராஜ். கதையையும் பாடலால் சொல்லியிருப்பது ஒரு நயமென்றால் காதலையும் கண்ணியமாய்க் காட்டியிருப்பது இன்னொரு நயம். இருந்தாலும் மாமூலான தொழில் பயத்தால் ஒரு அனுராதா டான்ஸ்.

அனுராதா டான்ஸ் என்றவுடன் ம்யூஸிக் நினைவுக்கு வருகிறது. 'காஞ்சிபுரம் ஜரிகைப் பட்டும்' சரி, 'ஓடையின்னா நல்லோடை'யும் சரி, 'வாழைப் பழுத்திருக்கும்' சரி இன்னும் காதில் ரீங்காரம் இடுகின்றன. சந்திரபோஸ் இசை டிபார்ட்மெண்டை வெகு அமர்க்களமாகக் கவனித்துக் கொண்டிருக்கிறார்.

முன் பாதி கிண்டி ரேஸ் குதிரையோட்டம் என்றால் பின் பாதி ரேக்ளாக் காளையோட்டம். முன்னதில் கவர்ச்சி அதிகம். பின்னதில் பேய், மனசாட்சி என்று தங்களுக்குள்ளேயே தீர்மானமாய் இல்லாமல் சொன்னாலும் சோடை போகவில்லை.

திருவாதிரைக் களியுடன், கூட்டு சேர்த்து சாப்பிட்ட மாதிரி இனிப்பும் காரமும் அழகாய் இணைந்த ஒரு கலவை.

நேரம் போனதே தெரியலீங்க

—ஜெயமன்மதன்

(அடுத்த இதழில் வேறு பதுமை. வேறு கதைகள்)

## வட்டமேஜை

● 45 வயதே நிரம்பிய ஜான்ஹிக்கின்ஸ் அமெரிக்காவில் பிறந்தாலும் நமது தென்னிந்திய சங்கீதம் பாடுவதற்கென்றே கடவுளால் படைக்கப்பட்டவர். நமது சங்கீதத்தில் எது உயர்ந்ததோ, எது சத்தியமானதோ அதைக் கற்றறிய முற்பட்டு அதற்கு ஏற்ற குருவையும் அடைந்தார். பாலசரஸ்வதியின் சகோதரராகிய புல்லாங்குழல் வாய்ப் பாட்டு வித்துவான் டாக்டர் டி. விசுவநாதன் ஹிக்கின்சுக்காக இசையில் நிறையப் பாடுபட்டார். ஜயம்மாள், பாலசரஸ்வதி விச்வநாதன் வழியில் ஒருவர் இசையில் உருவாவதென்றால் இலேசான காரியமல்ல. முதலில் அந்த சங்கீதத்தின் மகிமை தெரிந்திருக்க வேண்டும். ஹிக்கின்ஸ் பாகவதர் அந்த வழியில் உருவாகி எடுப்பாக மேடைக் கச்சேரிகள் செய்து வந்தார். உச்சரிப்பு, சுருதி சுத்தம், லய ஞானம், சம்பிரதாயம் மாறாத பாடாந்தரம் இவையனைத்தும் ஹிக்கின்ஸின் குறிக்கோளாக இருந்தன.

இசைச் சரித்திரத்தில் ஜான் ஹிக்கின்ஸுக்கு என்றும் ஒரு தனி இடம் உண்டு.

லான்டியகோ (யூ.எஸ்.ஏ.) கே.வி.நாராயணசுவாமி

● 1985-ம் ஆண்டு இளைஞர் ஆண்டு என்பதில் எங்களுக்கெல்லாம் மகிழ்ச்சிதான். ஆனால் ''கல்கி'' அறிவிப்பில் 26 வயதிற்குட்பட்ட இளைஞர்களைப் பற்றி மட்டும் கேட்டிருப்பது எந்த விதத்தில் நியாயம்? முப்பதாம் வயது வரை ஒருவர் இளைஞர் பட்டியலில் இடம் பெறலாம் என்று எண்ணுகிறேன்.

சென்னை—5 குமரி ஜெய்

● பல பாசங்கள் வேஷங்களாக இருக்கும் இன்றைய நாளில், 'ஆளாகி நாளாச்சு' சிறுகதையின் காயத்ரியைப் போல் அன்பைத் தேடி பாசத்துக்காக ஏங்கும் இதயங்கள் மிகப் பல.

கூடலூர் பி. டி. இலகவதி

● இந்திரா அனுதாப அலைதான் எதிர்கட்சித்தலைவர்களை அடித்துக் கொண்டு சென்றுவிட்டது என்ற உங்களது ஆதங்கத்தைக்கார்ட்டூன் மூலம் காட்டியிருந்தாலும் — அனுதாப அலை இல்லாமலேயே ராஜீவ் வெற்றி பெற்று பிரதமராகிவிடுவார் என்ற வாசகரின் கருத்தை வட்ட மேஜை பகுதியில் வெளியிட்டிருந்தது ''கல்கி''யின் பெருந்தன்மையைக் காட்டுகிறது.

மதுரை—1 பி. எல். பரமசிவம்

● மறைந்த சோஷலிஸ்ட் தலைவர் திரு அசோக் மேத்தாவைப் பற்றி டாக்டர் விஜயலட்சுமி சொன்ன கருத்துக்கள் அவரின் புகழுக்கு மேலும் புகழ் சேர்க்கிறது.

கவுந்தப்பாடி அன்புதாசன்

● திருவாரூரில் தியாகபிரம்மத்தின் வீட்டின் அவல நிலையை எழுதியுள்ளதற்குப் பலன் கிடைத்துவிட்டது. காஞ்சி காமகோடி கர்நாடக சேவா டிரஸ்ட் மூன்று லட்ச ரூபாய் செலவில் இவ்வீட்டினைப் புது மெருகுடன் கட்டுவதற்கு ஏற்பாடு செய்துள்ளது. வேலைகள் தொடங்கிவிட்டன.

திருவாரூர் வேதா

● எழுதியவருக்கு மட்டுமல்லாமல் ஓவியத்தை வரைந்தவருக்கும் பெருமை அளிக்கும் விதத்தில் அவர் பெயரையும் கதையின் தலைப்புக்கருகில் வெளியிட்டு புதுமை செய்துவிட்டீர்கள்.

சென்னை—5 எஸ்.சம்பத்குமார்

● 'கல்கி'யின் தலையங்கத்தில் உறுதியான ''முதுகெலும்பைக்'' கண்டேன்! கண்ணியமான கருத்துமிக்க தலையங்கம், அதற்குக்கட்டியம் கூறும் ஆழ்ந்த கார்ட்டூன்கள்! என் பாராட்டுக்கள்!

சென்னை--5 வெ.சீதாராமன்

● தராசு எழுதியுள்ள பாமாயில் பற்றிய விளக்கம் அனைவருக்கும் பயன்படக்கூடியது.

மதுரை டபிள்யூ.சி.சுந்தரேசன்

# அரசியல் தலைமை மட்டும் போதாது!

● இ. காங்கிரஸ் இதற்கு முன் கண்டிராத அளவில் மிகப் பெரிய வெற்றியைப் பெற்றிருக்கிறது. பிரதமர் தேசப் பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்வதுடன், மக்களிடையே ஒழுக்கத்தை ஒரு தேசிய சக்தியாக வளர்க்க முனைய வேண்டும். இதற்கு காங்கிரஸ் ஒரு அரசியல் தலைமையை மட்டும் கொடுத்தால் போதாது. ஒரு ஒழுக்கமுள்ள தலைமையைத் தர வேண்டும். தலைவர்கள் எவ்வழி அவ்வழி மக்கள். 2. தேசத்தின் முன்னேற்றம் அறிவாளிகளைச் சரியானவிதத்தில் பயன்படுத்திக் கொள்வதிலேதான் இருக்கிறது என்பதை உணர்ந்து அதற்கேற்பச் செயல்பட வேண்டும்.

பம்பாய் வசந்தா ராம்தாஸ்

கடைசிக்கடிதம் பரிசு பெறுகிறது.



# இந்தியாவின் இந்திரா

## கறைபடிந்த அத்தியாயம்

**9**

**ஜூன் 12, 1975**

சளசளவென்று வார்த்தைகள் இரைத்த அலகாபாத் உயர் நீதிமன்றம் சட்டென்று அமைதியானது. ஜஸ்டிஸ் சின்கா தாமே எழுதி டைப் செய்த கற்றைக் காகிதங்களை எடுத்துக் கொண்டு உள்ளே நுழைந்தார். அந்தக் காகிதங்களுக்குள் ஒரு புயல் ஒளிந்து கொண்டிருந்தது என்பது அந்த சபைக்குத் தெரியாது. அடங்கிய குரலில் அமைதியாகத் தீர்ப்பை வாசிக்கத் தொடங்கினார் சின்கா : ''ரேபரேலி தொகுதியில் இருந்து எம்.பியாக தேர்ந்தெடுக்கப்பட்ட திருமதி இந்திராகாந்தியின் தேர்தல் செல்லாது. அவர் அடுத்த ஆறு வருடங்களுக்குத் தேர்தலில் நிற்கத் தகுதியற்றவராகிறார்.

ஏன்?

தேர்தல் விதிகளுக்கு முரணான 'ஊழல்' முறைகளை அவர் தேர்தலின்போது மேற்கொண்டார். உதாரணம் : அரசு ஊழியரான தன்னுடைய செயலாளரைத் தேர்தல் பணிகளுக்குப் பயன்படுத்தியது.

**ஜூன் 24, 1975**

அலகாபாத் உயர் நீதி மன்றத்தின் தீர்ப்பை முழுமையாகத் தடைசெய்ய சுப்ரீம் கோர்ட் மறுத்தது. பாராளுமன்ற நடவடிக்கைகளில் கலந்து கொள்ளவோ தீர்மானங்களுக்கு வாக்களிக்கவோ இந்திராவிற்கு உரிமை இல்லை என்பதை உறுதி செய்தது.

ஏன்?

அலகாபாத் கோர்ட் 'சட்டவிரோதமானது தேர்தல்' என்று குறிப்பிட்ட தீர்ப்பு நியாயமானது.

**நவம்பர் ஏழு: 1975**

வழக்கின் விவரங்களை ஆராயாமலே, சுப்ரீம் கோர்ட் அலகாபாத் தீர்ப்பைத் தள்ளுபடி செய்தது.

ஏன்?

ஜூனில் தவறானவை, ஊழல் முறைகள் என்று குறிப்பிடப்பட்டவை இப்போது சட்டபூர்வமாகச் சரியாகிவிட்டன! இந்தத் தலைகீழான மாற்றம் சாத்தியமானது எப்படி?

ஜூனிற்கும் நவம்பருக்கும் இடையே நேர்ந்த அரசியல் மாற்றம். அதன் பெயர் —

எமெர்ஜென்ஸி!

எமெர்ஜென்ஸியைப் புரிந்து கொள்ளச் சில வருடங்கள் பின்னோக்கிப் போக வேண்டும்.

எழுபத்தியொன்றில் இந்திராவிற்கு அமோக வெற்றி. அறுபத்தியேழிற்கு நேர் மாறான நிலைமை. பாராளுமன்றத்தில் மூன்றில் இரண்டு பங்கு மெஜாரிட்டி. எந்தச் சட்டத்தையும் யார் தயவு இன்றியும் திருத்த முடியும். 72ல் மாநிலத் தேர்தல்களில் மறுபடியும் அமோக வெற்றி.

எழுபத்தி மூன்று: பாராளுமன்றத்திற்கு அடிப்படை உரிமைகளில் கை வைக்க அதிகாரம் உண்டு என்றது சுப்ரீம் கோர்ட். மூன்று சீனியர் ஜட்ஜ்கள் தீர்ப்போடு முரண்பட்டனர். ஷெலட், ஹெக்டே, குரோவர் என்ற அந்த மூன்று சீனியர்களையும் புறக்கணித்து, அடுத்த நாளே ஜனாதிபதி கிரி, ஏ. என். ரே என்ற இளையவரைத் தலைமை நீதிபதியாக நியமித்தார். 'எங்களுக்கு உதவக் கூடிய நீதிபதிகள் தேவை' என்று மோகன் குமார மங்கலம் பாராளுமன்றத்தில் பகிரங்கமாகச் சொன்னார்.

எழுபதுகளில் இதுதான் இந்திராவின் மனநிலை. ஒரு புறம், பெரிய தலைவர்களுடன்

மாலன்

மோதிக் கட்சியில் இருந்து வெளியேற்றப்பட்ட கசப்பு. மறுபுறம், மக்கள் தந்த மகத்தான வெற்றியின் மிதப்பு. இரண்டு பெரிய அலைகளுக்கு நடுவே நின்றிருந்தார் இந்திரா. ஓர் அடிப்படையான விஷயம் அவரை அச்சுறுத்தியது. ''வறுமையை 'வெளியேற்றும் என்னுடைய திட்டங்களுக்கு இவர்கள் முட்டுக்கட்டையாக நிற்கிறார்கள். நீங்கள்தான் ஆதரவு தர வேண்டும்'' என்று எழுபத்தி ஒன்றில் தேர்தல் வைத்தபோது, மறு பேச்சு பேசாமல் மக்கள் அமோகமாக ஆதரவு தந்தார்கள். எந்தத் தடையும் இல்லாமல் செயல்படக் கூடிய மெஜாரிட்டியைக் கொடுத்தார்கள். அடுத்த தேர்தலுக்குள் நிலைமையைச் சரி செய்யவில்லை என்றால் இதே ஜனங்கள் தூக்கியும் எறிவார்கள். தன்னுடைய திட்டங்கள் நிறைவேற வேண்டுமானால் சொன்னதைக் கேட்கிற ஆட்கள் வேண்டும். ஏன் எதற்கு என்று எதிர்க் கேள்வி கேட்காமல் சொன்னதைக் கேட்கிற ஆட்கள். இப்படிச் செய்யலாமே என்று வாதாடாத ஆட்கள். 'உதவி' செய்கிற ஆட்கள். அவர்கள் புத்திசாலிகளாக இருக்க வேண்டியதில்லை. திறமைசாலிகளாக இருக்க வேண்டியதில்லை. விசுவாசிகளாக இருந்தால் போதும். கண்ணை மூடிக்கொண்டு ஆதரிக்கிற விசுவாசிகள்.

விளைவு: இந்திராவைக் காக்கைகள் சூழ்ந்தன. எந்த லட்சியமும் உயர்ந்த நோக்கங்களும் இல்லாமல் சுய நலம் மட்டுமே குறியாய்க் கொண்ட, பதவி ஒன்றே இலக்காய்க் கொண்ட காக்கைகள். அவர்கள் விசுவாசம் கொண்டவர்களாக இருக்கிற பட்சத்தில், தனிப்பட்ட வாழ்க்கையில் எப்படிப்பட்டவர்களாக வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும் என்று நினைத்தார் இந்திரா. ஊழலும் சுயநலமும் பெருகின.

ஆனால், மக்கள் — குறிப்பாக இளைஞர்கள் சும்மா இருக்கவில்லை. ஊழல் பேர்வழிகளை வீட்டிற்கு அனுப்பியே ஆக வேண்டும் என்று களத்தில் இறங்கினார். குஜராத் மாணவர்கள் அப்போதைய முதல்வர் சிமன்லால் பட்டேல் கீழிறங்க வேண்டும். சட்டமன்றம் கலைக்கப்பட வேண்டும் என்று கிளர்ச்சியைத் துவக்கினர். தங்களை தேசிய அளவில் மதிப்புமிக்க ஒருவர் வழி நடத்த வேண்டும் என்று விரும்பி ஜெயபிரகாஷ் நாராயணனை அணுகினர்.

அரசியலையே வெறுத்து ஒதுங்கி இருந்த ஜே. பி. நாட்டின் நிலைமை கண்டு மாணவர்களின் அழைப்பை ஏற்றுக்கொண்டார்.

✖ விடிந்தால் பேச்சுவார்த்தை: இரவு இரண்டரை மணிக்கு ஃபெர்னாண்டஸைக் கைது செய்தனர்.

✖ ஜே. பி. யின் போராட்டம் குஜராத்தில் வென்றது

ஆனால் சில நிபந்தனைகள் விதித்தார். மிக முக்கியமான நிபந்தனை: என்ன நடந்தாலும் சரி, எந்தக் கட்டத்திலும் போராட்டம் வன்முறையை மேற்கொள்ளலாகாது. அஹிம்சைதான் வழி.

ஜே. பி. யின் போராட்டம் குஜராத்தில் வென்றது. பீகாருக்குப் பரவியது. பீகார், இந்திராவிற்கு நெருக்கமான எல். என். மிஸ்ராவின் மாநிலம். உத்திரப் பிரதேசத்திற்கு அடுத்தபடியாக அதிகமான எம். பிக்களை அனுப்பும் மாநிலம். அங்கே நேர்கிற அரசியல் மாறுதல்கள் அகில இந்தியாவையும் பாதிக்கும். எனவே மோதல் துவங்கிற்று. மாணவர்கள் ஜேபியின் தலைமையினால் வசீகரிக்கப்பட்டார்கள். சுதந்திரப் போராட்ட காலம் போல் படிப்பைத் துறந்து 'கிளர்ச்சியில் இறங்கினர். குற்றம் சொல்ல முடியாத ஜே. பி.யைப் போன்ற ஒரு தலைவர். அவருடன் வாழ்க்கையில் கறை படியாத மாணவர்கள். நோக்கங்களோ உன்னதமானவை. வழிமுறையோ சாத்வீகம். சாதாரண ஜனங்கள் மத்தியில் ஒரு விழிப்புணர்ச்சி பிறந்தது. அறிவு ஜீவிகள் யோசிக்க ஆரம்பித்தார்கள்.

தொழிலாளர்களைத் திரட்டும் முயற்சி துவங்கியது. 'போனஸ் என்பது லாபத்தில் பங்கல்ல காலந்தாழ்த்தப்பட்ட சம்பளம்'; ஒவ்வொரு தொழிலாளிக்கும் வருடத்திற்குப் பதின்மூன்று மாதச் சம்பளத்திற்கு உரிமை உண்டு என்று சட்டத்திருத்தத்தின் மூலம் தேர்தலின் போது தொழிலாளர்களைக் கவர்ந்திருந்தார் இந்திரா. ஜார்ஜ் பெர்னாண்டஸ் அதைப் பிடித்துக் கொண்டார். ரயில்வே ஊழியர்கள் 'காலந் தாழ்த்தப்பட்ட சம்பளத்தைக்' கேட்டனர். ரயில்வே இந்தியாவின் மிகப் பெரிய நிறுவனம். இந்தியாவிலேயே அதிகமான ஆட்கள் வேலை செய்வது ரயில்வேயில்தான். அதன் தேவைகளும் செலவினங்களும் பெரிது (அதனால் தான் இன்றும் அதற்குத்தனி பட்ஜெட்) கோரிக்கையைக் கேட்டு அரசாங்கம் திடுக்கிட்டது. பெர்னாண்டஸைப் பேச்சு வார்த்தைக்கு அழைத்தது. விடிந்தால் பேச்சு வார்த்தை. இரவு இரண்டரை மணிக்குக் கதவைத் தட்டி பெர்னாண்டஸைக் கைது செய்து கொண்டு போனது.

முட்டாளடிக்கப்பட்டுவிட்டதாகத் தொழிலாளர்கள் கொதித்தனர். ஸ்டிரைக்கில் இறங்கினர். வன்முறை எழுந்தது. போலீசின் உதவியை நாடாமல் ராணுவத்தைக் களத்தில் இறக்கியது அரசாங்கம்.



''இந்த அடிதடிசண்டையைப் பேச்சு வார்த்தை மூலம் தீர்த்துக்கலாமே?''

''போங்க சார். இந்தச் சண்டை கலாட்டாவுக்குக் காரணமே பேச்சு வார்த்தைதான்!''

ஏ. வி. தேவன்

---

சட்டசபை கலைக்கப்பட்ட குஜராத்தில் தேர்தல் நடத்தப்பட வேண்டும் என்று எதிர் கட்சிகள் கோரின. சட்டசபை கலைக்கப்பட்ட ஆறு மாதத்தில் தேர்தல் நடத்தப்படவேண்டும் என்பது அரசியல் சட்டத்தின் சட்டமே. முதலில் மறுத்த இந்திரா கடைசியில் இணங்கினார். உ. பியின் அலகாபாத்தில் தீர்ப்பு வாசிக்கப்பட்ட அதே நாளில் குஜராத்தில் மக்கள் தங்கள் தீர்ப்பை வெளியிட்டனர். எதிர்கட்சிகளின் ஜனதா முன்னணிக்குப் பெரும் வெற்றி.

ஒரு பக்கம் மாணவர்கள், பொதுமக்கள், அறிவு ஜீவிகள். அவர்களுக்கு சக்தியும் அனுபவமும் மிக்க தலைவராக ஜே. பி. இன்னொரு புறம் தொழிலாளர்கள். அங்கே ஒரு பிடிவாதமான தலைமை. எதிர்க்கட்சிகள் தலையெடுக்கும் நிலைமை. இப்போது தன்னுடைய தேர்தலைத் தள்ளுபடி செய்யும் தீர்ப்பு. தற்காலிகமாக வேறு ஒருவரைப் பிரதமராகத் தேர்ந்து எடுக்கலாம் என்றார் சவான். வேறு யார்? கட்சி குழம்பிற்று.

''தன்னை எல்லோரும் சூழ்ந்து கொண்டு குத்த வருவதாகச்சொன்னார் இந்திரா. 24ம் தேதி சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு. 25ம் தேதி நள்ளிரவில் எமர்ஜென்சி பிரகடனம்.

எல்லாத் தலைவர்களும் கைதாகினர். பார்லிமெண்டில் 'சத்தம் போடும்' எம். பிகள் கைதாகினர். மதத் தீவிர வாதிகள் கைதாகினர். நக்சலைட்கள் கைதாகினர். எதிர்க்கட்சி அரசாங்கங்கள் கலைக்கப்பட்டன. பத்திரிகைகளுக்குத் தணிக்கை. லட்சக் கணக்கில் பொது மக்கள் கட்டாய அறுவைச் சிகிச்சைக்கு உள்ளானார்கள். துருக்மான் கேட் போன்ற சேரிகளில் வாழ்ந்த மக்கள் துப்பாக்கிச் சூட்டிற்குப் பலியாக நகரங்கள் சுத்தப்படுத்தப்பட்டன. எதை எதிர்த்தும் யாரும் வழக்குப் போட முடியாது. அடிப்படை உரிமைகள் ரத்து செய்யப்பட்டன. அரசியல் சட்டம் சஸ்பெண்ட் செய்யப்பட்டது.

எமெர்ஜென்சி இந்தியா, இந்திரா, இருவரின் கறைபடிந்த ஒரு அத்தியாயம். பயம் பதற்றம், தவறான யோசனைகள், அரசியல் முதிர்ச்சி இன்மை, சுயநலம் எல்லாமுமாகச் சேர்ந்து உந்த இந்திரா எடுத்த முடிவு அது.

மனோதத்வ ரீதியாக அவரின் இந்த நடவடிக்கைக்குக் காரணங்கள் உண்டு.

அவை—

(தொடரும்)

அடங்காத குதிரையாக அவன். [illegible] கொண்டிருந்தான்.

குதிரை என்று சொல்ல இன்னும் வயதாக வில்லை... கன்று... இன்னும் பயம் வராத கன்று... பொறுப்பு அறியாத கன்று.... இந்தக் கன்றுக்கு வண்டியைக் கண்டால் பிடிக்கவில்லை....புழுதியைக்கிளப்பித் சோபத் தைக் காட்டுகிறது... கடிக்கப் பார்க்கிறது... ஓடப் பார்க்கிறது... எத்தனை நாளைக்கு இப்படி ஓட முடியும் ?

'' ...அப்பா... இனிமேல் அந்த ஆபீசில் நான் வேலைக்குப் போகமாட்டேன்...''

''...என்ன காரணம்...?'' என்று சேட் டார் குழாயில் தண்ணீர் அடித்துக்கொண் டிருந்த அப்பா.

''...ஆபீசா அது...? கடை.... வெறும் கடை.....''

ஒரு வார்த்தையோடு நின்றுவிட்டான்.... அதற்கு மேல் பேச முடியாமல்...

திரும்பவும் குழாயில் 'கடக்–கடக்' சத்தம் கேட்க ஆரம்பித்துவிட்டது... தண்ணீர் விழ இவன் அவரையே பார்த்தபடி இருந்தான்....

அப்பாவுக்கு மெலிந்த விரல்கள்... கைகள்... உடம்பே மெலிந்ததுதான்...எலும்பெல்லாம் வெளியில் தெரியும் உடம்பு... நிறைய சுருக் கங்கள் விழுந்த நெற்றி... சந்தோஷத்தையே கண்டறியாத முகம்... கவலை–துக்கம், இதெல் லாம்தான் நான் பார்த்தது என்கிற சன்னம். ஆனால்... இந்த மெலிந்த உடம்பு ஒரு நிமிஷம் சும்மா இருந்து இவன் பார்த்த தில்லை... பிசாசு மாதிரி ஏதாவது ஒரு சக்தி அதன் உள் புகுந்து கொண்டு இயக்குகிறதோ என்று இவனுக்கு ஒவ்வொரு சமயம் தோன் றும். தினமும் ஆபீசில் பத்து மணி நேரம் உழைக்க வேண்டும்... அதன் பிறகு ஒரு எலெக்ட்ரிகல் ஷாப்பில் இரண்டுமணி நேர வேலை... இதற்குப் பிறகும் இரவில் அம்மா வுக்கு உதவியாக வாழைப்பூ ஆய்ந்து கொடுக்க அவரால் முடியும்... ரேஷன் க்யூவில் நிற்க... சைக்கிளைத் துடைத்து எண் ணெய் போட... ஸ்டவ் ரிப்பேர் செய்ய.... ''...யோசனை பண்ணு... எதையும் ஒரு தடவைக்கு இரண்டு தடவையா யோசனை பண்ணணும்... அப்புறம் முடிவெடுக்கணும்.

# அந்தக் கசப்புகளை விழுங்க...



முடிவு எடுத்த பிறகு யோசனை பண்ணக் கூடாது...''

'...எல்லாம் எனக்குத் தெரியும்... 'என்கிற மாதிரி இவன் நின்று கொண்டிருந்தான்.

...தலைக்கு மேல் வளர்ந்த பிள்ளை..... கொஞ்சம் அதிகமாகப் படித்த பிள்ளை.... அதனால் இந்தப் பிள்ளை சட்டென்று எதையும் எதிர்க்கிறது... கோபப்படுகிறது..... நியாயம் கிடைக்கவில்லை என்று ஆத்திரப்படுகிறது... என்னத்தைச் சொல்லுவது... எப்படித் திருத்துவது...

''...இது இரண்டாவது இடம்...'' என்றார் மெதுவாக. ''இந்த பாரு... இந்த நாளிலே சம்பாதிக்கிறது கஷ்டம்டா...... ரொம்ப கஷ்டம். நமக்கு யாரு வேலை கொடுக்கிறா சொல்லு...? குடும்ப நிலையை உத்தேசித்துத்தான் இந்த ஏற்பாடு... நீ படிச்சிருக்கே... ஒரு இடத்திலே உட்கார்ந்துண்டா அனுபவம் கிடைக்கும்... அங்கே இருந்தே வேற நல்ல இடத்துக்கு முயற்சி செய்யலாம். நமக்கு அதிர்ஷ்டம் இருந்தா..''

'...சென்ற தலைமுறை இப்படித்தான் பேசும்...' என்று இவன் எடுத்துக் கொண்டான்....அவர்களுக்கு வாழ்க்கையில் பெரிய லட்சியங்கள் இருந்ததில்லை...

''...யோசனை பண்ணு...''

அதன் பிறகு, எதுவும், அவர் பேசவில்லை. குளித்தார். விபூதி இட்டுக் கொண்டார். சாப்பிட்டார். படி இறங்கும்போது ஞாபகமாக அம்மாவிடம் ''ஊறுகாய் வைச்சிருக்கியா.....?'' என்ற கேள்வி.

பக்கத்துப் போர்ஷனுக்குப் போய், அன்றைய 'ஹிந்து'வை இரவல் கேட்டான். அரை மணி கழித்து வரும்படி பதில் வந்தது. அதற்காகக் காத்திருந்தான். காத்திருப்பது

## ஜி.நாராயணன்



ஒன்றும் புதிது இல்லை... இன்றைக்கு பேப்பருக்காக... சின்ன வயதில் புத்தகங்களுக்காக 'காமிக்கு'களுக்காக... அவைகளைப் படித்துவிட்டுத் தானே அந்தப்பாத்திரமாக ஆகிவிட்டதுபோல் ஒரு கற்பனையை மனத்தில் வளர்த்துக் கொள்ளுவான்... அதுவும் ரிச்சி-ரிச்... அந்தப் பணக்காரப் பையன்...அவனாக இவன் அடிக்கடி மாறிவிடுவான்... நிஜத்தில் கிடைக்காததெல்லாம் கற்பனையில் கிடைக்கும்.... மெலிந்த அப்பா, தாட்டியான மிஸ்டர் 'ரிச்'சாக மாறுவார். டாலர்களை இவன் முன் கொட்டுவார்....' உனக்கு வேணுங்கிறதை வாங்கிக்கோடா...'

அந்தக் கற்பனையில் — கைத்தில் அம்மா பிசைந்துபோடுகிற பழையதைச்சாப்பிட்டு...

வளர்ந்தும், இந்தப் பழக்கம் போகவில்லை.

தான் வேலை செய்யப் போகிற ஆபீசைப் பற்றியும் மனத்தில் ஒரு மாதிரியான சற்பனை இருந்தது... அந்த ஆபீஸ் ஒன்பது மணிக்கு ஆரம்பித்து ஐந்து மணிக்கு முடிந்துவிடும்... பெரிய ஹால்... 'குளுகுளு' வென்று குளிர்ச்சியாக இருக்கும்...மானேஜருக்குத் தனியாக காபின்... லேடி செகரட்டரி... காஷியர் — ஸ்டோர் கீப்பர் என்று ஒவ்வொரு வேலைகளும் தனித் தனியாக ஆட்கள்... டெலிபோன் விடாமல் அடிக்க... டெலெக்ஸ் சத்தம் போட... எல்லாரும் சுறுசுறுப்பாக இயங்க...

...இப்போதைய ஆபீஸ்... ஆபீசா அது... ...த்தூ... கடை... பெரிய கடை.... ஒரு டைப்ரைட்டர் இருந்தால் மட்டும, கடை ஆபீசாகிவிடுமா ?

காலை எட்டரை மணிக்குக் கடை வாசலில் இவன் நிற்க வேண்டும். முதலாளி மோட்டார் சைக்கிளில் வருவார்.... சாவியை வாங்கி, இவன்தான் திறக்க வேண்டும்... இவன்தான் 'பில்' போட வேண்டும்..... பணத்தை எண்ணி வாங்க வேண்டும். 'டைப்' அடிக்க வேண்டும்... 'பாங்கி'ற்குப் போக வேண்டும். டெலிபோனில் பதில் சொல்ல வேண்டும்... சாயந்திரம் லெட்டர்களை எடுத்துப் போய், 'போஸ்ட்' செய்ய வேண்டும். கடையைக் கட்ட எட்டு மணி ஆகிவிடும். பூட்டி, சாவியைத் திரும்பவும் முதலாளியிடம் கொடுக்க வேண்டும். மோட்டார் சைக்கிள் கிளம்பும்போது, 'குட்நைட் சார்' சொல்ல வேண்டும்... அதன் பிறகு பஸ் பிடித்து வீட்டுக்கு வரவேண்டும்...

...சே... இந்த முந்நூறு ரூபாய் சம்பளத்துக்கு எத்தனை பாடு...?

'ஹிந்து'வை வைத்துக் கொண்டு அலசினான். ஒரு கத்தை அப்ளிகேஷனை எழுதிக் கொண்டு போய் 'போஸ்ட்' செய்தான்.

கையில் இன்னும் ஒன்று பாக்கியிருந்தது.

இருபது ரூபாய்க்கு போஸ்டல் ஆர்டர் வாங்கி அத்துடன் அனுப்ப வேண்டும்.... இன்றே அனுப்பிவிடலாம் என்று தோன்றியது.... இருபது ரூபாய் இருக்குமா என்று அம்மாவிடம் கேட்டான்... அவள் பதில் சொல்லவில்லை.... இருக்காது என்பது தெரிந்ததுதான்... அப்பா ஆபீஸ் போய், அவரிடம் பணம் வாங்கி அப்படியே அனுப்பிவிடலாமா...?

அவர் வேலை செய்கிற இடம் 'கோடவுன்' தெருவில் இருந்தது... எப்பொழுதோ அப்பா

சொன்ன விவரங்களை நினைத்துப் பார்த்தான். அதை வைத்துத் தேடி... என்று பிடித்து....

வீடு மாதிரி இருந்தது... நின்னை ரேழி என்று எங்கும் துணி பேல்களாக அடுக்கியிருந்தன. மடித்து மடித்துத் துணிகள்... குச்சியில் சுற்றிச் சுற்றித் துணிகள்... பரணில் துணிகள்... 'ஷோ கேஸி'ல் துணிகள்.... அதில் நிறங்கள்... விதங்கள்... கோடுகள் கட்டங்கள்... இன்னும்...

கொஞ்சம் உள்ளே போனதும் ஒரு வெள்ளையான விரிப்பின் ஓரமாக அப்பா தெரிந்தார்.

இவன் வந்தது தெரியாமல் அவர் என்னவோ எழுதிக் கொண்டிருந்தார்... சுற்றிலும் தடிமனுசக் கணக்குப் புத்தகங்கள்.... குழந்தைகள் எழுத உபயோகிக்கும் சின்ன குட்டையான மேஜை... சாய்வாக இருந்தது.... அதன் எதிரில் சம்மணமிட்டு உட்கார்ந்து... ஒரு சேர் இல்லே... மேஜை இல்லே.

மெல்ல இவன் கூப்பிட்டான்.

திடுக்கிட்டு அவர் பார்த்தார்.... எழுந்து வந்தார்....

வந்த காரணத்தை இவன் சொன்னான்.

''...இருபது ரூபாய்க்கு இப்ப எங்கேடா போவேன் நான்...''

சட்டைப்பையைக் கையால் தட்டிச்சொன்னார். பெருமூச்சு வந்தது.... ஒரு நிமிஷம் யோசனையாக நின்றார்.

''...இரு...இதோ வரேன்...''

எதிரே தெரிந்த தள்ளு கதவை மெதுவாகத் திறந்து உள்ளே போனார். அங்கே யாரிடமோ அவர் பேசுவது கேட்டது...

''...க்யா ?''

திரும்பவும் அப்பாவின் கெஞ்சல்...

''...க்யா யார்... எப்பப் பாரு அட்வான்ஸா ?''

''...இல்லே... பையனுக்கு இப்ப அவசரமா....''

''...நிம்டஜுக்கு எப்ப அர்ஜெண்ட் இல்லே. 'பீபீ'க்கு உடம்பு சரியில்லே... பையனுக்கு பீஸ் கட்டணும்... உறவுக்காரங்க வந்திருக்காங்க. எப்ப வாழ்ந்தே...? சபி பீ... இது வரைக்கும் ஒரு மாசமாவது உன் சம்பளத்தைப் பூராவா வாங்கியிருக்கியா...?''

அப்பாவின் மௌனம், இசத்கு, 'சரி' என்று தலையை ஆட்டுகிற மாதிரி இருந்தது.

''...இந்த மாதிரி கிழம் சட்டை, பூடா எல்லாத்தையும் என் அப்பா தலையிலே கட்டிட்டுப் போயிட்டார். இதே வேலையை நூறு ரூபாய்க்குச் செய்யறதுக்கு எத்தனை பசங்க காத்துண்டு இருக்காங்க, தெரியுமா? வயசாயிடுத்து... உன்னாலே எந்த வேலையை ஒழுங்கா செய்ய முடியுது... 'சேல்ஸ் டாக்ஸ் ரிடர்ன் இன்னும் போகல்லே. பெனல்டி போட்டுடுவான்... அதைப் பத்தி நீ கவலைப் பட்லே... பீஸ் ரூப்யா... அதுதான் இப்ப கவலே...''

தணிந்த குரலில் அப்பா ஏதோ சொல்ல

''...சாரி... யு சேன் கோ...''

கதவு மீண்டும் திறந்து அப்பா வரும் சமயம், இவன் உள்ளே பார்த்தான்... எதிரே நாற்காலியில் சேட்டு தெரிந்தான். ரொம்பவும் சின்ன சேட்டு... பையன்... இவன்

---



**பயனற்ற பிரார்த்தனை!**

- மனம் தூய்மையடைவதற்காகத் தினந் தோறும் பிரார்த்தனை செய்தால், நாளுக்கு நாள் அதிகமாகத் தூய்மை அடைந்து வருவோம்.
- இதயத்தால் செய்யாத பிரார்த்தனை பயனற்றது என்பது மட்டுமன்று, தீமையும் செய்யும். கடமையைச் செய்து விட்டதாக நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளும்படி செய்துவிடும்.
- தியாகம் தான் சிறந்த வீரம். அந்த வித்தையின் ஆதியும் அந்தமுமே பிரார்த்தனை.

—மகாத்மா காந்தி.

தொகுப்பு:—ஆர். எஸ். சுப்பிரமணியம்.

ஒருத்தி: என் கணவர் எப்போதும் ஒரு இலட்ச ரூபாய் காரில் தான் ஆபீசுக்குப் போவார் தெரியுமோ?

மற்றவள்: அட இதென்ன பிரமாதம்! என் கணவர் இரண்டு இலட்ச ரூபாய் பஸ்ஸில் தான் ஆபீசுக்குப் போனார் தெரியுமோ!

கே. ஜி. எப். பழனிச்சாமி



வயதுதான் இருக்கும்... ஆனால்... 'மொழு மொழு'வென்று உடலில் ஒரு செழுமை... பைஜாமாவும் — ஜிப்பாவும் — மைனர் சங்கிலியுமாக... தளதளவென்று...

நேரே அப்பா இவனிடம் வந்தார்... எண்ணெய் வழிந்த முகத்தை வேட்டி நுனியில் அழுத்தித் துடைத்துக் கொண்டார்.

''இன்னிக்கே அனுப்பணுமா...?''

இவன் பேசாமல் இருந்தான்.

''...சாயந்திரம் எப்படியும் வாங்கிண்டு வந்திடறேன்.... நாளைக்கு அனுப்பிச்சுடு... என்ன...''

அதற்கும் இவன் பதில் சொல்லவில்லை.... அவர் முகத்தைப் பார்த்தபடியே இருந்தான். அந்த இடம் ஒரு நிமிஷம் நிசப்தமாக இருந்தது.

...அப்பா... ஒரு சேர் இல்லாமல், மேஜை இல்லாமல் இத்தனை வருஷங்களாக உங்களால் எப்படி வேலை செய்ய முடிந்தது...

...சம்பாதிக்கிறது கஷ்டம்டா... ரொம்ப கஷ்டம்...

இதுவரைக்கும் ஒரு மாசமாவது உன் சம்பளத்தைப் பூராவா வாங்கியிருக்கியா.... எப்ப வாழ்ந்தே... கபீ பீ...

...சாரி... யு கேன் கோ...

அவ்வளவு சொற்களும், அவமானமும் தனக்கே கிட்டிவிட்டது போல்... அந்தச் சேட்டை — இந்த உலகத்தை அடித்து நொறுக்க வேண்டும் போல் ஒரு நிமிஷம் சூடு உடலில் வேகமாக ஏறியது.... அந்த வெப்பமெல்லாம் ஒரு பெருமூச்சில் வெளி வந்து... அடங்க...

''...இப்ப நான் ஆத்துக்குப் போகல்லே...

''அப்புறம்...?''

''...கடைக்குப் போறேன்.... சாரி.... ஆபீஸ்... போய், திரும்பி வேலையில் சேர்ந்துடறேன்...''

குரல் கொஞ்சம் கரகரத்தது. மேலே எதுவும் சொல்ல முடியாமல் தொண்டையை எதுவோ அடைக்க... 'விரு விரு'வென்று தெருவைப் பார்க்க நடந்தான்.

இவன் மனத்தில் ரீச்சி—ரீச் வந்தான். அந்தக் கற்பனையில் — சுகத்தில் முன்பு பழையது சாப்பிட்டதுபோல்... இப்பொழுது ஆபீசும் ஒரு கற்பனையாக...

நிஜத்தை — அந்தக் கசப்பை விழுங்க முயற்சி செய்தான்....

துணி பேல்களையெல்லாம் கடந்து தெருவில் இறங்கும் வரை அப்பாவும் கூடவே வந்தார்.

'...இவன் ஏன் திடீர் என்று மாறிப் போனான்...' ஒரு கணம் புரியாமல் தடுமாறினார்.

ஒரு பயம் வந்து உடலை நடுக்கிற்று.

குழந்தை... பாவம்... மனசிலே எத்தனையோ ஆசையை வைச்சுண்டு...

அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தார்.

மேலே பார்க்க முடியாமல் ஏதோ மறைத்தது....

புறங் கையால் கண்களைத் துடைத்துக் கொள்ள... புறங்கை ஈரமாக இருந்தது.

## 14

## வந்தார் ராபர்ட் கிளைவ்

பதினெட்டாம் நூற்றாண்டின் அந்த மத்திய காலங்களில் ராஜரீகம் என்பது அழுக்குத் துணியை விட அழுக்காகவும், கந்தல் துணியை விட சர்வ கந்தலாகவும் இருந்தது.

டில்லியில் பலவீனமான மொகலாய அரசு. மத்தியில் அவர்கள் பிரதிநிதியாக மற்றொரு பலவீன நிஜாம் அரசு.

தெற்கே அவர்கள் பிரதிநிதியாக இருக்க ஆர்க்காடு சுபாவின் நவாப் அரசு!

இந்த நவாப் அரசில் உட்பட்டவர்கள் தான் தமிழ் பேசும் நாட்டில் உள்ள சிற்றரசர்கள் எல்லாம்.

ராமநாதபுரம்; புதுக்கோட்டை, மதுரை, சிவகங்கை, தஞ்சாவூர், திருச்சி, தென் சீமைப்பாளையங்கள், ஆகிய எல்லாமே குட்டிக் குட்டி அரசுகள்.

இவர்களாவது சச்சரவின்றி இருக்கிறார்களா என்று பார்த்தால் அவர்களும் இல்லை. இவர்களிடையே போட்டி; பொறாமை; மற்ற பல இடங்களை அபகரிக்க விரும்பும் மண் ஆசை!

தட்டிக் கேட்க ஒரு பெரிய கோல் இல்லாததால் நிஜாமிலிருந்து, கீழே சிற்றரசுகள் வரை அநேகமாகப் பாதி, முக்கால் சுதந்திரர்களாகவோ, அல்லது முழு சுதந்திரர்களாகவோ இருந்தார்கள்.

ஆர்காட்டு சுபாவுக்கான பதவிச் சண்டை தான் தென்னகத்தை அப்போது வெகுவாகப் பிடித்திருந்தது. சந்தா சாகிப்பும் முகம்மதலியும்தான் அந்தச் சண்டைக்கு காரணங்களாக விளங்கினார்கள்.

இவர்கள் தங்கள் உதவிக்கு வியாபாரிகளாக வந்த பிரெஞ்சு ஆங்கிலேயர்களை இழுக்கப்போக அவர்களும் தென்னக ராஜரீகத்தில் நுழையப்போக.

நாடு புதிய அலை அடிப்புக்களில் அல்லோலப்பட ஆரம்பித்தது.

இருபத்தாறு வயது இளைஞன் ராபர்ட் கிளைவ் அந்தச் சூறாவளியைக் கண்டு சிறிது அச்சப்பட்டான். கொம்பு சுற்றி கீழ் திசையிலிருந்து அடித்தது மழை மேகங்கள். ஏராளத்தில் சூழ்ந்திருந்தன.

ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன இந்தியா வந்து- இது போல சூறாவளியைப் பார்த்த தில்லை. மரங்களை மூட்டோடு பிடுங்கிக் கொண்டிருந்தன.

ஆட்கள் நிற்க முடியவில்லை! சுருட்டித் தூர எறிவது போல் இருந்தது.

சூறாவளி தணிவதாகவும் இல்லை! நிமிடத்திற்கு நிமிடம் கூடிக் கொண்டிருந்தது.

இவ்வளவும் ஆர்க்காட்டுக்கு ஒரு காதம் இருக்கும்போது தோன்றி விட்டது. அது தான் சோதனையாக இருந்தது.

ஜான் மோரிஸ் என்ற கேப்டன் கிளைவிடம் வந்தான். ''ஸார்! இப்போது என்ன செய்ய! குதிரைகள் தள்ளாடுகின்றன. சிப்பாய்களும் தவிக்கிறார்கள். வழியெல்லாம் மரங்கள் விழுந்து கிடக்கின்றன. மழை வேறு வந்து கொண்டிருக்கிறது'' என்றான்.

கிளைவ் அவனைக்கூர்மையாகப்பார்த்தான். ''நாம் போய்க் கொண்டிருக்கிறோம். நிறுத்தம் கிடையாது'' என்றான் கண்டிப்பாக.

''எஸ்; ஸர்'' என்று ஒரு உத்தாரம் பெற்ற வணக்கம் கொடுத்து, ஜானாகத் திரும்பிப் போனான்.

கிளைவ் தனது குதிரையை இழுத்துப் பிடித்து, படை பூராவையும் பார்த்தான்.

சின்னஞ் சிறு பட்டாளம்!

புயலின் உக்கிரம் அதை மோதிக் கொண்டிருக்க, குதிரைகள் தள்ளாடின. பொதி மாடுகள் தத்தளித்தன. ஊழியர்கள் சுமைகளோடு கீழே குனிந்தார்கள். அவ்வேப்பாது தூறல் விழ, அத்தனை சிப்பாய்கள் உடைகளும் நனைந்து ஒட்டிப் போயின.

பல்லக்குகளை மடித்துவிட்டார்கள் புயலில் எதிர்த்துப் போக முடியவில்லை. வெறுமை




யான தனுசுக் கொம்புடன், எலும்புக் கூடு போல் ஊர்ந்தன அவை.

கிளைவ் பல்லைக் கடித்துக் கொண்டான்.

அந்தப் படை பூராவையும் சரித்திரத்தில் புகழ் பெற்றதாகச் செய்ய முடியுமா?

அதைத்தான் விரும்பியிருந்தான் அவன்.




அந்தப் படை எடுப்பே அவனது யோசனை தான்.

திருச்சிக் கோட்டையில் முகம்மதலி இருக்க, அதை விடாமல் முற்றுகை போட்டுக் கொண்டிருந்தார் சந்தா சாகிப் !

அந்த முற்றுகையைத் தளர்த்துவதற்கு ராபர்ட் கிளைவ் ஒரு தந்திர யோசனையைக் கம்பெனியாருக்குத் தெரிவித்திருந்தார்.

பதிலுக்கு ஆர்க்காட்டை அவர்கள் (இங்கிலீஷ்காரர்கள்) தாக்கினால், சந்தாசாகிப் பயந்து போய்த் தமது தலைநகரைக் காப்பாற்றிக் கொள்ள ஓடி வருவார் ! அதன் மூலம் திருச்சிராப்பள்ளி முற்றுகையைத் தளர்த்தி விடலாம் என்பது கிளைவ் யோசனை !

கம்பெனிக் கவுன்ஸிலாரும் அதை ஒத்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் அல்பமான படைதான் கிளைவுக்குக் கிடைத்திருந்தது. இதை வைத்து ஓர் அசகாய காரியத்தைச் செய்ய முடியுமா ?

இங்கிலீஷ் வியாபாரக் கம்பெனியின் குமாஸ்தாவாக இருந்தவன் கிளைவ். திடமான மனம்.! உறுதியான நம்பிக்கை! இவை இருந்தால் எதையும் சாதிக்க முடியும் என்று நினைப்பவன்.

இந்தப் புயலிலும் துணிந்து போக வேண்டும் என்று கூறிவிட்டான்.

படையும் அவன் உத்தரவுக்குக் கீழ்ப் படிந்தது. எந்தத் தயக்கமும் இல்லாமல் போக ஆரம்பித்தது.

சாலையெல்லாம் மரங்கள் விழுந்து கிடந்தன. போகும் வழி சகதிப் பாதையாக

திருந்தது. அங்கங்கே நொடியும், பள்ளமும் சோதனை செய்தன.

இருப்பினும் கிளைவின் ஆணைப்படி கீழ்ப் படிந்து படை ஆர்க்காட்டை நோக்கிச் சென்றது.

ஆர்க்காட்டில் அப்போது நவாபின் சிறு படை ஒன்று இருந்தது. 1100 பேர்கள் கொண்டது.

அவர்கள்தான் கோட்டையைப் பாது காத்துக் கொண்டிருந்தார்கள்.

நவாபின் (சந்தா சாகிப்) ஏனைய படைகள் திருச்சிராப்பள்ளியை முற்றுகையிடப் போயி ருந்தன.

கிளைவின் படை வரும் செய்தி ஒற்றர்கள் மூலம் ஏற்கனவே ஆர்க்காடு போய்விட்டது.

கோட்டைத் தளகர்த்தர் சிறிது திகைப்பு அடைந்தார். இதுபோன்ற ஒரு சூழ்நிலையை அவர் எதிர்பார்க்கவில்லை. அந்தப் படையில் வெள்ளையர்கள் 200 பேர் வந்தார்கள் என்ற செய்தி சற்றுக் கலவரப்படுத்தியது.

நன்றாகச் சண்டை செய்வார்கள் அவர்கள். சட்டதிட்டங்களுக்கு வணங்கி நடப்பவர்கள் அவர்கள். ஒரு ஆணைக்குக் கீழ்ப்படிந்து என்ன வேண்டுமானாலும் செய்வார்கள் என்று ஆர்க் காட்டுப் படைக்குத் தோன்றியது.

ஆனால் முதல் நாள் (ஆகஸ்டு 31, 1751) புயல் வந்ததால் வெள்ளையர் படை வராது என்று அவர்கள் நம்பினார்கள். படையைப் புயல் சின்னாபின்னம் ஆக்கிவிடும் என்று எதிர்பார்த்தார்கள்.

ஆனால் எல்லா எதிர்பார்ப்பையும் மீறி, புயலின் கடுமையையும் ஏற்றுக் கொண்டு வெள்ளையர் படை வருகிறது என்பது அவர் களைக் கலவரப்படுத்தியது.

குறிப்பாக புயல் வந்தால் யாரும் படையை நகர்த்தமாட்டார்கள்! அங்கேயே பாது காப்பாகத் தங்கிவிடுவார்கள். எனவே, வெள்ளையர் படை அந்த வழக்கத்தை மீறியும் நடைபோட்டு வருகிறது என்று தெரிந் தது. அவர்களது அந்த மன உறுதியே ஆர்க் காட்டுத் தளகர்த்தரின் திடத்தைக் குலைத்து விட்டது.

ஆங்கிலேயரைத் தம்மால் எதிர்க்க முடி யாது என்று ஒரு கிலி வந்துவிட்டது.

கோட்டைக்குள் இருந்தால் ஆபத்து என்று நினைத்தார். ஆட்சேதமும், பொருட் சேத மும் அதிகமாக ஏற்படும் என்று நம்பினார். எனவே தமது படையை அழைத்து, கோட்டையைத் தவிர்த்துவிட்டு ஆர்க்காட் டுக்கு வெளியே போய்த் தண்டு இறங்கினார்.

ஆர்க்காட்டின் தெற்கே தொலைவில் ஒரு சிறு கோயிலை அடுத்து கிளைவ் படைகள் திரும்பும்போது, ''மிஸ்டர், கிளைவ்!'' என்று குரல் கேட்டது.

கிளைவ் திரும்பியபோது அந்தப் பழைய சைவக் கோயிலின் இடிக்க மதில் இடுக்கு வழியே ஸாவேஜ் கையை ஆட்டினார்.

''இங்கே எப்போது வந்தீர்கள்?'' என்று கிளைவ் தனது குதிரையை நிறுத்தினான்.

''கோயிலுக்குள் ஒரு பரிவாரமே இருக் கிறது'' என்று சொல்லி மதிலைத் தாண்டி வந்தான் ஸாவேஜ்.

பொம்மைராஜாப் பாளையம் போனதை யும் அங்கு நடந்த விஷயங்களையும் விரிவாக வர்ணித்தான்.

கிளைவ் ஆழ்ந்து அவனைப் பார்த்து, ''கடவு ளின் மீது பொறுப்பைப் போட்டுவிட்டு ஆர்க் காட்டுக்குள் போகப் போகிறேன். எனக்கு என்ன நடக்கும் என்று தெரியாது! அதனால் பணம் நிச்சயமாக வருமா, சொல்லுங்கள்!'' என்றான்.

''அதனால்தானே, பணயம் பிடித்து வந் திருக்கிறேன்'' என்றார் ஸாவேஜ்.

''ஹும் இந்தியர்கள் எதிலும் அதிக விசு வாசம் வைப்பதில்லை! தங்கள் சுயநல அக்கறை நிறைவேற வேண்டும் என்றால், தங்கள் சொந்த மகளைக்கூட இழக்கத் தயா ராக இருப்பார்கள்!'' என்றான்.

ஸாவேஜ் பேசவில்லை.

''நீங்கள் பின்னால் வாருங்கள்! கோட் டையை நான் முதலில் பிடிக்கட்டும். பிறகு எல்லாரும் சேர்ந்தே நுழையலாம்!'' என்று கூறினான்.

செஞ்சுகா அந்தக் கோயிலின் அம்மனைக் கும்பிட்டுவிட்டு வெளியே வந்தாள்.

பிராகாரங்களில்பரிவாரம் தங்கியிருந்தது.

இப்போதுதான் தாய் தந்தையரை விட்டு வந்த வருத்தம் தெரிந்தது.

பணயமாகப் போவதற்கு அவள் ஆட் சேபணையைத் தெரிவித்திருக்கலாம்.

ஆனால் அது தனது தந்தையின் ஜமீனுக்கே பாதகமாக முடியும்.

எனவே ஆட்சேபணை எதுவுமின்றி ஒரு தியாகத்துக்குத் தயார் ஆனாள்.

அம்மனை வலம் வந்துவிட்டு வெளியே வந்ததும், ஸாவேஜ் வாயிலில் வந்து நின்றார்.

''இளவரசி! நீங்கள் பல்லக்கில் ஏறலாம்! புறப்படப் போகிறோம்!'' என்றார்.

படிகளில் காலை வைத்து செஞ்சுகா இறங் கினாள்.

பரிவாரம் இப்போது வரிசைப்பட்டு நின்றது.

முக மண்டபத்து அருகே பல்லக்கு உட் கார்ந்திருந்தது.

செஞ்சுகா சலனமில்லாத மனத்துடன் அதை நோக்கிச் சென்றாள்.

மற்ற காரியங்களைக் கவனிக்க ஸாவேஜ் போய்விட்டான்.

பல்லக்கை அடையுமுன், ''செஞ்சுகா!'' என்று குரல் கேட்டுத் திரும்பினாள்.

தொனி குறைவாகக் கேட்ட குரல் அது. எங்கிருந்து வருகிறது என்று தெரியவில்லை.

சுற்றுமுற்றும் பார்த்தாள்.

அப்போதுதான், கோயில் கூரைக்கு மேலே அந்த முகப்பு பொம்மைகள் அருகில் ஒரு முகம் தெரிவது தெரிந்தது.

ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

வர்மனின் முகம் அது.

ஏதோ சைகை செய்து கொண்டிருந்தான். என்ன சொல்ல விரும்புகிறான்?

(தொடரும்)

# 1000 வீடுகள் உங்களுக்காக!

விஜிபி ஸ்ரீ ராமானுஜர் டவுனில்
சென்னை அருகே

## 540 ச. அடி
கொண்ட
இரண்டு படுக்கை
அறை கொண்ட வீடு
**ரூ. 70,800/**
(2400 ச.அடி மனை உள்பட)

## 340 ச. அடி
கொண்ட
ஒரு படுக்கை அறை
கொண்ட வீடு
**ரூ.50,800/-**
(2400 ச.அடி மனை உள்பட)

**விஜிபி ஹவுஸிங்**
பிரைவேட் லிமிடெட்
சைதாப்பேட்டை, சென்னை-600 015

விஜிபி உங்கள்
வாழ்க்கையை
வளமாக்குகின்றது

ஆம். சென்னை அருகே விஜிபி ஸ்ரீ ராமானுஜர் டவுனில் ரூ. 50,800/-லிருந்து நீங்கள் வீடுகள் வாங்கலாம்.

25% முதலில் மீதம் 24 சுலப மாதத் தவணைகளில் வீடு கட்ட கடன் தரும் ஸ்தாபனத்திலிருந்து 15 வருடங்களில் திருப்பி செலுத்தும் வகையில் கடன் வசதி ஏற்பாடு.



# நெருப்பு மலர்

## 25

கிட்டத்தட்ட ஒன்பது மணிவாக்கில் காலை சமையல் ஒரு வழியாக முடிந்தது. அதற்குள் வியர்த்துப் போய்விட்டது கிருத்திகாவிற்கு. கைவிரல்களிலும், முகத்திலும் திட்டு திட்டாய்க் கரி. புது ஸ்டவ் ஆனதால் பாத்திரங்களிலும் அதிகம் கரி ஏறியிருந்தது. ஸ்டவ்வில் சமைப்பதற்கே மூச்சு வாங்கிப் போயிற்று. இத்தனைக்கும் ''மாமா, இத்தனை புளி போதுமா பாருங்கள். இந்த உப்பு வேண்டுமா? இன்னும் குழம்பு கொதிக்கணுமா, இல்லை இறக்கிவிடட்டுமா...? ஏன் மாமா, ரசத்திற்குத் தனிப் பொடியா...? இதே மிளகாய்ப் பொடியில் கொஞ்சம் போட்டால் போதாதா? மாமா, புஸ்தகத்தில் இரண்டு பேருக்குச் சமைப்பதற்கான அளவுதானே கொடுத்திருக்கிறது. மூன்று பேருக்கு என்ன செய்வது...?''—புத்தகம் பார்த்தது போதாதென்று நொடிக்கு ஒரு தரம் அனந்தசாமியிடமும் கேட்டுக் கேட்டுச் செய்தாள்.

அவள் படுகிற சிரமத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண்டார் அனந்தசாமி. 'எத்தனை வசதியாக வளர்ந்த குழந்தை..... இதற்கு ஏன் இந்தக் கஷ்டம்... என்று நினைத்துக் கொண்டார். நாளையிலிருந்து இவளைச் சிரமப்படுத்தக்கூடாது என்று முடிவு பண்ணிக் கொண்டார்.

''இதோ பாரு கீர்த்தி. நாளையிலிருந்து நீ சரிகாய் அரியறது, அரைத்துக் கொடுக்கிறது இந்த இரண்டு வேலைகளை மட்டும் செய். நானும், சாயிராமும் மற்ற எல்லா வேலைகளையும் கவனிச்சுக்கறோம். எங்களுக்கு முரட்டுத்தனமாக வேலை செய்து பழக்கம். எங்க கை, வேலை செய்து காய்ச்சுப் போன கை. ஆனால் உன்னுடையது அப்படி இல்லை ..நீ ரொம்ப, ரொம்ப மென்மையானவள். மென்மையான வேலையாகச் செய்தால் போதும்...''

''ஏன் மாமா, கவிஞர் சார் கை பேனா பிடிக்கிற கை. சம்மட்டி பிடிக்க பயந்து இங்கே ஓடி வந்தால் நீங்க கரண்டி பிடிக்கச் சொல்றீங்களே...? நியாயமா மாமா...?''

''இதோ... பாருங்க மாடம். இன்னொரு தரம் சம்மட்டி பிடிக்கப் பயந்து ஓடி வந்துட்டேன்னு மட்டும் சொல்லாதீங்க... சாரைக் கேளுங்க. இந்த மெட்ராசுக்கு வந்து எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கேன்னு சொல்லுவாரு... இவர்கிட்டே வந்து சேர்றதுக்கு முன்னால் ஊரிலிருந்து கொண்டு வந்த நூறு ரூபா நோட்டு செலவாகித் தெருத் தெருவா சுற்றி,கொத்தவால்சாவடியில் மூட்டைகூடத் தூக்கிப் போட்டிருக்கேன். அந்த வேலை பிடிக்காமல் வந்து சாப்பாடில்லாமல் கடைசியில் என் அதிர்ஷ்டம் இந்த வீட்டு வாசல் முன்னால் மயங்கி விழுந்திருக்கேன். அதனால் இன்னொரு தரம் வேலைக்குப் பயந்து ஓடி வந்துட்டதாக நினைக்காதீங்க. ஏதோ ஒரு கொள்கை, லட்சியத்தில் ஓடிவந்திருக்கேனே தவிர வேறு எதற்கும் இல்லை...''

''அடே, கவிஞருக்கு இத்தனை சீக்கிரம் இவ்வளவு கோபம் வருமோ...?''

''கவிஞர்கள் உணர்ச்சிவசப்பட்டவர்கன்னு நீங்க கேள்விப்பட்டதில்லையா மாடம்...?''

''பொதுவாகக் கலைஞர்களே உணர்ச்சி வசப்பட்டவர்கள்தான். இல்லையா மாமா?''

''உங்க வாக்குவாதத்தில் என்னை இழுக்காதீங்க. இரண்டு பேரும் குளிச்சிட்டு வந்தால் சாப்பிட்டு வெய்யில் அதிகம் உறைக்கிறதுக்கு முன்னால் கிளம்பலாம்.''

''இதோ வந்துட்டோம் மாமா...''

குளித்து அழகான கைத்தறிப் புடைவையில் வந்தாள் கிருத்திகா. இனி அர்ஜுனுடன் சேர்ந்து போகிறபோது மட்டுமே சல்வார் கம்மீஸ் அணிவது என்று முடிவு செய்திருந்தாள். மற்றபடி மதிப்பையும், மரியாதையையும் ஏற்படுத்துகிற கைத்தறிப் புடைவைதான். அதுவும் 'மேற்புடைவையை படிப்படி

---

### உண்மை எப்போது கொடுமை?

- கெட்ட எண்ணத்தோடு உங்களால் சொல்லப்படும் ஓர் உண்மை, உங்களால் கற்பனை செய்யக்கூடியபொய்கள் அனைத்தையும்விடக் கொடுமையானது.

—ப்ளேக்.

### கோபம் எப்போது நியாயம்?

- கோபப்படுவது யார்க்கும் எளிது. ஆனால், சரியான நபர் மீது, சரியான அளவில், சரியான நேரத்தில், சரியான நோக்கத்துடன், சரியான வழியில் கோபப்படுவது எல்லோருக்கும் எளிதல்ல.

—அரிஸ்டாடில்.

தொகுப்பு: கிருஷ்ண சங்கர்.



யாக அடுக்கித் தோள்பட்டையில் பின் குத்தி கம்பீரமாகப் போக வேண்டும். பார்க்கிற போதே கையெடுத்துக் கும்பிடத் தோன்ற வேண்டும். கன்னியக் குறைவான நினைப்போ என்னமோ தன்னைப்பற்றி யார் மனத்திலும் எழுந்துவிடக் கூடாது. அதுமட்டுமின்றி அநாவசியமாக எந்த ஆணிடமும் பேசக் கூடாது. சிரிக்கக் கூடாது; பழகக் கூடாது. வெகுளியாய், கள்ளமற்று சிரித்துப் பேசப் போய் எவனும் தப்பாகப் புரிந்து கொண்டு விடக்கூடாது... மாமாவையும், இதோ கூடப் பிறக்காத குறையாக வந்து சேர்ந்திருக்கிற இந்த சாயிராமையும் தவிர வேறு யார் பழக்கமும், நட்பும் தேவையில்லை...'

எப்போதையும் போல் தலைமுடியைத் தளரப் பின்னலிட்டு, பவுடர் பூசாமலே பளபளக்கும் முகத்தில் சின்னதாகக் கறுப்புச் சாந்துப் பொட்டும் அதற்கு மேல் விபூதியும் இட்டுக் கொண்டு வெளியில் வந்தபோது அவளுக்காக அறை வாசலில் காத்துக் கொண்டிருந்த சாயிராம் ஒரு விநாடி பிரமித்து அவளையே பார்த்துக் கொண்டு நின்றிருந்தான்.

''என்ன அப்படிப் பார்க்கிறீங்க ...?'' என்று புன்சிரிப்புடன் கிருத்திகா கேட்க,

''இப்போ உங்களைப் பார்த்தால் எப்படியிருக்கு தெரியுங்களா...?'' என்று பதில் கேள்வி கேட்டான் அவன் கண்களை அகல விரித்தபடி...

''எப்படி இருக்கு?''

''தேவதை மாதிரி இருக்குங்க. ஏதோ ஒரு பெரிய லீடர் மாதிரி தோணறது. இந்திரா காந்தியைப் பார்த்தால் ஏற்படற மதிப்பும் மரியாதையும் வர்றது...''

''அப்படியா?'' என்று சிரித்தாள் அவள்.

''போதும். உங்க பாராட்டு. வாங்க சீக்கிரம். சாப்பிட்டுவிட்டுக் கிளம்பலாம். மாமா சொன்ன மாதிரி வெய்யில் தீவிர மாவதற்குள் விட்டிக்குள் போயிடலாம்...''

''என்னங்க நீங்க, என்னவோ நாம் மொஃபஸல்ல இருக்கிற மாதிரி பேசறீங்க...' என்று சொல்லிக் கொண்டே அவளுடன் நடந்தான் அவன்.

இரண்டு பேரும் சமையலறைக்கு வந்த போது அனந்தசாமி சாப்பிடத் தயாராகத் தட்டும் டம்ளர்களில் தண்ணீரும் எடுத்து வைத்து நடுவில் பரிமாறிக் கொள்கிற வசதியுடன் சமைத்ததையும் வைத்திருந்தார்.

''வாங்க சாப்பிடலாம்...' என்று அவர் களை உட்கார வைத்து சாதம், காய், சாம்பார் எல்லாம் பரிமாறிவிட்டுத் தாமும் உட்கார்ந்து சாப்பிடத் தொடங்கினார்.

இந்துமதி





அடுத்தவாரம்

## நம்ம ஊர் அமெரிக்காக்காரர்!

டாக்டர் எம். எஸ். மூ
சிறப்புப் பேட்டி

---

புளி தூக்கலாய், அரை கல் உப்பு குறைச்சலாய், கார நெடியுடன் சமையல் இருந்தது. கறியில் உப்பு போட மறந்திருந்ததால் அசட்டுத்தனமாகத் தித்தித்தது.

ஒரு வாய் சாப்பிட்ட கிருத்திகா,

''என்ன மாமா இது...?'' என்று முகத்தைக் கோணலாக வைத்துக் கொள்ள, ''என்ன...?'' என்று எந்தவித பாவமும் இல்லாதவராகத் தலையை உயர்த்தினார் அனந்தசாமி.

''இது என்ன சமையல் மாமா... பார்த்துப் பார்த்து சமைத்தும் இப்படி ஆகிவிட்டதே?''

''எப்படி ஆகிவிட்டது?''

''சாம்பாரில் ஒரே புளி, வெண்டைக்காயில் உப்பில்லே. ர...''

''அவ்வளவுதானே...?'' என்று சிரித்தார் அவர்.

சாயிராம் ஒன்றும் சொல்லாமல் மௌனமாய்ச் சாப்பிடுவதைப் பார்த்துக் கேட்டாள் அவள்.

''இதைப் போய் எப்படி இத்தனை நிதானமாய் ருசித்துச் சாப்பிடறீங்க?''

மெலிதாய் புன்னகைசெய்தான் சாயிராம்.

''அடுத்த வேளை சாப்பாடு என்பது ஒரு பிரச்னையாக இல்லாமல் வளர்ந்துட்டீங்க நீங்க. ஏதோ ஒரு சாப்பாடில்லை, நல்லவிதமாகவே சாப்பாடே கிடைக்கும் என்கிற நிச்சயமிருக்கிறது. பாதுகாப்பு இருக்கிறது. அதனால் ருசி தெரிகிறது. ஆனால் நானெல்லாம் அப்படி இல்லீங்களே... அடுத்த வேளை சாப்பாட்டை விடுங்க, இந்த வேளையே இவர் போடலேன்னால் பட்டினிதானுங்களே... அப்படிப்பட்டவனுக்கு ருசி என்னங்க தெரியும்?''

அவன் குரலும் வார்த்தைகளும், சிரித்துக் கொண்டே சொன்னாலும் அந்த முகபாவனையும் அவளுக்குள் சொல்ல முடியாத ஒரு வருத்தத்தை ஏற்படுத்தியது. அவன் சொன்னதன் நிஜம் நெஞ்சைத் தொட்டது. 'அடுத்த வேளை சாப்பாட்டிற்கான பிரச்னை ஏற்படாதபோதுதான் ருசி தெரிகிறது....' என்று நினைத்துக் கொண்டாள். ஒரு வேளை தான் கேட்டது இவனது உணர்வுகளைப் புண்படுத்தியிருக்குமோ என்ற எண்ணத்தில், ''ஐயம் ஸாரி. தெரியாமல் கேட்டுவிட்டேன...'' என்று தடுமாறிக் கொண்டே சொன்னதைக்கேட்டு, ''என்னங்க, நீங்க.,'' என்று சிரித்தான் அவன். அவளை வருத்தப் படுத்திவிட்ட குற்ற உணர்வுடன் பேச ஆரம்பித்தான்.

''மன்னிப்பு கேட்கிற மாதிரி என்ன கேட்டுட்டீங்க... தப்பாக ஒன்னும் கேட்காதபோது எதுக்கு இப்படி வருத்தப்படறீங்க...? உங்க முகத்தைப் பார்த்தால் நான் தான் மன்னிப்புகேட்கணும் போல இருக்கு.''

''யாரும் யார்கிட்டேயும் மன்னிப்பு கேட்க வேண்டாம். பேசாமல் சாப்பிடுங்க...'' என்று இரண்டுபேரையும் சமாதானப்படுத்துகிற மாதிரி இடையில் குறுக்கிட்டுச் சொன்னார் அனந்தசாமி. பின் சாயிராமின் பக்கம் திரும்பி, ''இதோ பாருப்பா, யார், யாருக்கு சாப்பாடு போடறது...? நம் எல்லாருக்கும் பகவான்தான் சாப்பாடு போடறான். எல்லாமே அவன் கொடுக்கிற பிச்சை. அப்படி இருக்கிறபோது நான் போடலேன்னு நீ சாப்பாடு கிடைக்காமலா இருந்துடப்போறே...? ஏதோ எனக்கு ஒரு வாய்ப்பு, சந்தர்ப்பம் கிடைச்சிருக்கு, செய்யறேன். இப்படி ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தாயேப்பா என்று அந்த பகவானுக்கு மனஸ் பூர்த்தியா நன்றி சொல்லிண்டிருக்கேன். அதனால் இனிமேல் இவர் போட்டார்னு சொல்லாதேப்பா. நீ, நான்னு வித்தியாசப்படுத்தாதே... இந்தக் கூரையின் கீழ் நம்மையெல்லாம் ஒன்று சேர்த்து வச்சிருக்கானேன்னு சந்தோஷப்படலாம்.... என்ன...?''

சாயிராம் தலையைக்கூட ஆட்டத் தோன்றாமல் ஒரு விநாடி அப்படியே உட்கார்ந்திருந்தான். உடம்பு சிலிர்த்துப் போயிற்று. நடு முதுகில் ஒரு தரம் சொடுக்கிற்று. 'என்ன மனசு இவருக்கு...' என்கிற ஆச்சரியம் திரும்பத் திரும்ப வந்தது.

கிருத்திகாவும் அதே மாதிரிதான் இருந்தாள். எழுந்து போய் அவரைப் பாசத்தோடு ஒரு தரம் சேர்த்துக் கட்டிக் கொள்ளத் தோன்றியது.

இரண்டு பேரும் அப்படியே இருப்பதைப் பார்த்து, ''ம்... சீக்கிரம் மோர் விட்டுக் கொண்டு சாப்பிட்டு முடித்து எழுந்து கிளம்புகிற வழியைப் பாருங்கள்...'' என்று அனந்தசாமி சாப்பிட்டு முடித்து, கையை உதறிக் கொண்டு எழுந்ததும் அவர்களும் அவசரமாய் சாப்பாட்டை முடித்துக் கொண்டு கிளம்பினார்கள்.

## அருள்வாக்கு



பிறருடைய பாஷையை, பழக்கங்களை வெகு சுலபமாக எடுத்துக் கொள்வதில் தமிழ் ஜனங்களுக்கே ரொம்பவும் திறமை இருக்கிறது. தமிழன் என்றால் இங்கிலீஷ்காரனை விட நன்றாக இங்கிலீஷ் பேசுகிறான். ஹிந்திக்காரனைவிட நன்றாக ஹிந்தியில் பேசுகிறான். பால்ரும் டான்ஸிலிருந்து ஹிந்துஸ்தானி சங்கீதம் வரை எல்லாம் இவனுக்கு அநாயாசமாக வந்து விடுகிறது. இதிலே பாராட்டுவதற்கும் விஷயம் இருக்கிறது. கண்டிப்பதற்கும் விஷயம் இருக்கிறது. இது அந்நியம், பிறத்தியாருடையது என்று இல்லாமல் எதையும் இவனால் எடுத்துக் கொள்ள முடிகிறதே என்று பாராட்டலாம். ஆத்ம சிரேயஸுக்காக இல்லாமல் வெறும் இந்திரிய சுகத்துக்காகவோ புத்திப் பெருமைக்காகவோ மட்டும் இவன் மற்றவர்களின் தப்பான சமாசாரங்களில் மோகித்து விழுந்து அவற்றையும் தனதாக ஸ்வீகரித்து விடுகிறானே என்கிறபோது கண்டிக்க வேண்டியதாகிறது.

தமிழ் மொழியும் இந்தப் பிரதேசத்துக்கென்றே விசேஷமாக உள்ள சில பண்பாடுகளும் ரொம்பவும் புராதனமானவை—ஜீவசக்தி வாய்ந்தவை. அப்படியானால், இத்தனை தொன்மையும் சக்தியும் இல்லாத கலாசாரங்களே புதிதாக வந்தவர்களைத் தங்களில் கரைத்துக் கொள்கின்றன என்றால், அவற்றை விட வலுவாகத் தமிழ் நாடானது இங்கே வந்து குடியேறியவர்களின் விஷயத்தில் இதை செய்திருக்கத்தானே வேண்டும்? இப்படி நினைக்கத் தோன்றுகிறது. ஆனால் நடைமுறையில் பார்த்தால் நேர்மாறாக இருக்கிறது. மற்றப் பிரதேசங்கள் தங்கள் பாஷை, பழக்கங்கள் இவற்றிலேயே புதிதாக வந்தவர்களைக் கரைத்துவிடுகின்றன. ஆனால் தமிழ் நாடு ஒன்று மட்டும் இதற்கு விலக்காக இருக்கிறது. தமிழ் நாட்டில் மகாராஷ்டிரர்கள், ஆந்திரர்கள், கன்னடியர்கள், குஜராத்திகள், சௌராஷ்டிரர்கள் முதலிய பல சமுதாயத்தினர் எத்தனையோ பரம்பரைகளாக வாழ்ந்து வருகிறார்கள். ஆனால் அவர்கள் தங்கள் பாஷைகளையே பேசி வருகிறார்கள். தங்களது பழக்கவழக்கங்களையே பின்பற்றி வருகிறார்கள். ஆதிகாலத்திலிருந்து திராவிட தேசமானது இவ்வாறு அந்நிய தேசங்களிலிருந்தும் பாரதத்தின் பிற பகுதிகளிலிருந்தும் வந்தவர்களுக்கெல்லாம் இடம் தந்து அவரவரையும் அவரவரது பாஷை, சம்பிரதாயம் இவைகளிலேயே நிலைப்படுத்தியிருக்கிறது. தமிழ் நாடு ஒரு ரிப்ரிஜிரேடர் (குளிர்சாதனப் பெட்டி) போல் எல்லா பாஷைகளையும் எல்லா நாகரிகங்களையும் கெடாமல் குளிர்ச்சியுடன் காத்துத் தந்து வந்திருக்கிறது. குளிர் சாதனப் பெட்டியில் வைத்த பழம் போல் மற்ற பிரதேச பாஷைக்காரர்களான மகான்களின் இலக்கிய சிருஷ்டிகளும் இங்கே உண்டாகி, கெடாமல் ரட்சிக்கப்பட்டு வந்திருக்கின்றன. உதாரணமாக தியாகராஜரின் தெலுங்குக் கிருதிகள் இந்த மண்ணில் பிறந்தவையே. தெலுங்கு தேசத்திலேயே இப்படிப்பட்ட சிருஷ்டி உண்டாகவில்லை.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய ஸ்வாமிகள்

---

''ஜாக்கிரதையாகப் போய்விட்டு சீக்கிரம் வந்துவிடுங்கள்...'' என்ற அனந்தசாமியிடம் கையசைத்து விடைபெற்றுக் கொண்டு பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தபோது சாயிராம் சிரித்துக் கொண்டே விளையாட்டாகச் சொன்னான்:

''உங்ககூட இந்த சாயம் போன பாண்ட்டும், கிழிந்து தையல் போட்ட ஷர்ட்டுமாக வர்றதைப் பார்க்கிறவங்க என்னை உங்க வேலைக்காரன்னுநினைச்சுப்பாங்க, இல்லீங்க?''

அவன் விளையாட்டும், வேடிக்கையுமாக மனத்தில் எந்தக் கபடமும் அற்றுத்தான் சொன்னான். ஆனாலும் அவளுக்கு அது என்னவோ போல் இருந்தது. ஒன்றும் பேசாமல் மௌனமாக வந்தாள்.

பத்தடிகூட நடந்திருக்கமாட்டார்கள்.... அதற்குள் சாயிராம், 'ஆ...' என்று வலியில் வலது கால் பாதத்தைத் தூக்கி, சுட்டைவிரலுக்குச் சற்றுக் கீழே தைத்திருந்த சின்னக் கண்ணாடித்துண்டைப் பிடுங்கி ஓரமாக வீசிப் போட்டுவிட்டு இலேசாய்க் கசிந்த ரத்தத்தைத் துடைத்துக் கொண்டபோது, அவனை அனுதாபமாகப் பார்த்தபடி கேட்டாள் கிருத்திகா:

''ஏங்க, செருப்பு போட்டுக்காமலா வந்திங்க...?''

''நீங்க ஒண்ணு... இந்த நிலைமையில் செருப்புக்கு யாராலேங்க பத்து ரூபாய் செலவழிக்க முடியும்...? இப்படி வெறுங்காலோட நடந்தே பழகிடுச்சுங்க. எப்போவாவது படுகிற இந்தச் சின்ன காயத்தையும், வலியையும் பொருட்படுத்திட்டிருந்தா முடியுங்களா? வாங்க, போகலாம்....''

சிரித்துக் கொண்டே அவன் மேலே நடக்க, மனத்திற்குள் ஒரு முடிவிற்கு வந்தாள் கிருத்திகா.

(தொடரும்)

### அனுவசிய அலட்டல்

கல்லூரி விடுதியில் எங்கள் அறையில் தங்கிய சந்திரன் என்ற சக மாணவர் சாதாரண கணக்கைப் போடுவதற்குக்கூட அனாவசியமாக மிகவும் கஷ்டப்படுவார். எங்கள் உதவியையும் ஏற்கமாட்டார். ஓரிரவு தூக்கத்தில் எழுந்து தம் புத்தகத்திலேயே கடினகணக்கிற்குத் தீர்வு கண்டு எழுதிவிட்டுத் திரும்பத் தூங்கிவிட்டார். இதை நாங்கள் வியப்புடன் பார்த்துக்கொண்டிருந்தோம். மறு நாள் அவரிடம் விஷயத்தைச் சொன்னபோது நம்ப மறுத்து, ''என் புத்தகத்தில் யார் கணக்குப் போட்டது ?'' என்று சண்டைக்கு வந்துவிட்டார்.

**பி. மணிவண்ணன், ஈரோடு-3**



### நைட் பஸ்ஸில் நாடகம்

நைட் பஸ்ஸில் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது ஒரு புது மண தம்பதிகள் தனித் தனியே அமரும்படி ஆகிவிட்டது. நள்ளிரவில் வண்டி திருச்சியில் நின்றதும் விளக்குகளைப் போட்டதும்தான் தாமதம், புது மணப் பெண், ''ஐயய்யோ ! லைட்டு வேண்டாங்க'' என்று அரைகுறை தூக்கத்தில் அலற, அவள் கணவன் ஓடிச் சென்று அவளை மெல்ல தொட்டு எழுப்ப முயன்றதும் அவள் நாணிக் கோணி சிணுங்க, பஸ்ஸே சிரிப்பில் அதிர்ந்தது.

**கே. ராசசேகரன், மதுரை-7**

### பாடப் பிறந்த என் மகள்

இரண்டாம்தாரமாக வாழ்க்கைப்பட்டு புக்ககம் வந்த புதிதில் மூத்தாள் மகளைக் கண்டாலே எனக்கு எரிச்சல் வரும். எனக்கென்று ஒரு பெண் பிறந்தாள். அவளுக்கு எட்டு வயதில் நானே பாட்டு சொல்லித் தர முயன்றேன். துளிக்கூட அந்தக் கலையில் அவளுக்கு ஈடுபாடு இல்லை. ஒரு நள்ளிரவில், 'ப்ரோசேவாரெவருரா' எனிரென்று ஒலிக்கக் கேட்டுப் போய்ப் பார்த்தேன். மூத்தாள் மகள் தூக்கத்தில் இனிய குரலில் கச்சிதமாய்ப் பாடிக் கொண்டிருந்தாள்! அன்று முதல் அவள் என் மகள்தான் !

**திருமதி சுப்புலக்ஷ்மி, பம்பாய்-71**

# தூக்க
# ஓர்




### முன்னறிவிப்பு

28—8—84 அன்று விடியற்காலை நான்கு மணி அளவில் என்னை ஒரு குரல் மும்முறை அழைப்பதாகக் கனவு கண்டு திடுக்கிட்டு எழுந்தேன். அன்றே பத்து மணிவாக்கில் தந்தி வந்தது, என் தந்தை காலமாகிவிட்டதாக. அவர் விடியற்காலை நான்கு மணிக்கு என் பெயரைச் சொல்லி மூன்று முறை சுனகவரத்தில் அழைத்தார் என்று பிறகு அறிந்தேன்.

**சுப. அழ. பழனியப்பன், மன்னார்குடி-1**

### மர்மம் விடுபட்டது

என் அண்ணா தூக்கத்தில் 'நாகம் நாகம்' என்று புலம்பிக் கொண்டிருந்தான். என்னவோ ஏதோ என்று பயந்து கொண்டிருந்த நாங்கள் என் சிநேகிதி நாகலக்ஷ்மி அடிக்கடி எங்கள் வீட்டுக்குவந்த மர்மத்தைச் சீக்கிரமே புரிந்துகொண்டோம். அவளே என் அண்ணியானாள்.

**வி. தங்கம், பொள்ளாச்சி-1**



### 'குடை' வன்னல் !

என் பெரியப்பா மகன் தூக்கத்தில் எழுந்து குடையைப் பிரித்து வைத்துக் கொண்டு அதன் கீழ் உட்கார்ந்துவிட்டான். எழுப்பினால் 'சும்மா இரு. மழை பெய்கிறது' என்று எங்களை அதட்டினான் ! ஒருவாறு மழை நின்றுவிட்டது என்று அவனை நம்ப வைத்து, குடையை வாங்கி அவனைப் படுக்க வைப்பதற்குள் பெரும்பாடாகிவிட்டது.

**திருமதி லக்ஷ்மி சுப்பிரமணியன், கோவை-9**




த்தில்
னுபவம்

## கனவு குற்றத்துக்கு நிஜ தண்டனை!

அந்த அதிகாலை நேரத்தில் எதிர் வீட்டுச் சிறுமி உடைந்த பல்லும் ரத்தம் ஒழுகும் வாயுமாக நிற்பதைப் பார்த்து அதிர்ந்து போனேன். அருகில் ஆத்திரத்துடன் அவள் ஐந்து வயது தம்பி. அவள் பல்லை உடைத்த 'வில்லன்' நின்று கொண்டிருந்தான். ''ஏன்டா இப்படிச் செய்தாய்?'' என்று கேட்டேன். ''அவள் தான் என் சாப்பாட்டு தட்டில் எச்சில் துப்பினாளே'' என்றான்.

''எப்போது செய்தாள்'' என்று கேட்டபோது ''ராத்திரி கனவில்'' என்றானே, பார்க்கலாம்!

செ. சண்முகசுந்தரம், சென்னை-42

## அசரீரி

கணவரும் நானும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தபோது பத்து வருஷங்களுக்கு முன் இறந்து போன எங்கள் அருமைப் பெண்ணின் குரல், ''அம்மா, எழுந்திரு'' என்று சொல்வதாக என் காதில் ஒலித்தது. குழம்பிப் போய் கண் விழித்துப் பார்த்த போது மின் விசிறி 'ரெகுலேடர்' தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது. உடனே கணவரை எழுப்பினேன். அவர் மெயின் சுவிட்சை அணைத்த பிறகும் தீ அடங்க வெகு நேரம் ஆயிற்று. அன்று எங்கள் பெண்ணின் குரல்தான் எங்களைக் காத்தது.

கே. கௌரி, சென்னை-101

## ஆபத்து

வெளியூரிலிருந்து திரும்பிய என் கணவர் மாடியில் என் தந்தை வந்திருப்பதைப் பார்த்துவிட்டு, ''எப்பொழுது வந்தார் உன் அப்பா?'' என்று கேட்டார். நான், ''அப்பாவா? எப்போது வந்தார்?'' என்று விழித்தேன். அப்போது என் தந்தையே கீழே இறங்கி வந்து நள்ளிரவில் அவர் வெகு நேரம் கதவைத் தட்டிய பிறகு நான் எழுந்து வந்து திறந்துவிட்டுத் தாழ் போடாமல் திரும்பவும் தூங்கிவிட்டதாகக் கூறினார். தூக்கத்தில் என்னை அறியாமல் செய்த இச் செயல் எவ்வளவு ஆபத்தானது என்று உணர்ந்தேன்.

எஸ். நிலவு, திருச்சி

## காணமற் போன சங்கிலி

காலையில் குளிக்கப் போகும் பொழுது கவனித்தேன். கழுத்தில் கிடந்த நான்கு பவுன் சங்கிலியைக் காணவில்லை என்று. பதற்றத்துடன் வீடெங்கும் தேடினோம். கடைசியில் படுக்கையை உதறியபோது அதிலிருந்து விழுந்தது. பிறகுதான் நினைவு வந்தது இரவு திருடன் என்னை மிரட்டியதாகவும் நான் சங்கிலியைக் கழற்றிக் கொடுத்ததாகவும் கனவு கண்டேன் என்று. தூக்கத்தில் நிஜமாகவே சங்கிலியைக் கழற்றிப் போட்டிருக்கிறேன்!

எஸ். ஜான் பர்னாந்து, தூத்துக்குடி-1




## கேட்டதும் கொடுத்தவர்

ஸ்ரீ சத்திய சாயி பாபா என் கனவில் தோன்றி நான் கேட்காமலே எங்கள் தொழு நோயாளிகள் நல முன்னேற்ற கழகத்துக்கு நன்கொடை அளித்தார். உடனே பாபாவுக்கு நன்கொடை கேட்டு எழுதினேன். அந்த ஆண்டு பொங்கலுக்குத் தொழு நோயாளிகளுக்குப் புதுத் துணி வாங்க 5000 ரூபாய் நன்கொடை அனுப்பினார். அந்தக் கடிதம் இன்னும் என்னிடம் இருக்கிறது.

க. ஆ. நடராஜன், தஞ்சாவூர்

## ஒரு ரகசியம் அம்பலமாகியது

என் கணவர் காசுக்கு சீட்டாடுகிறார் என்று வெகு நாட்கள் சந்தேகமிருந்தும் அதை நிரூபிக்க முடியவில்லை. நேரம் கழித்து வந்தால் சினிமா சென்றதாகச் சொல்லுவார். ஓர் இரவு தூக்கத்தில் 'கிளாவர் ஜாக்கி போட்டிருக்கேன்' என்று அவர் உளறியதும் அவரை எழுப்பி, ''எங்கே போட்டீங்க, கிளாவர் ஜாக்கியை?'' என்றேன். விஷயம் அம்பலமாகிவிட்டது.

எஸ். துளசி, கும்பகோணம்-1



### கனவுக் கவிதைகள்

நள்ளிரவில் என்னையும் எழுப்பி உட்கார வைத்து தான் கண்ட கனவை கதை கவிதை வடிவில் சொல்ல ஆரம்பித்துவிடுவார் என் கணவர். (முத்தமிழின் முடிசூடா மன்னர் என்று நினைப்பு!) காலையில் இருவருக்குமே நடந்தது எதுவும் நினைவிருக்காது. இப்போதெல்லாம் முன்போல் என்னை சோதிக்காமல் தானே கனவுக் கவிதைகளை உடனுக்குடன் எழுதி வைத்துக் கொண்டுவிடுகிறார்.

கோ. பாக்கியம், கோட்டையூர்

### சிம்ம சொப்பனம்

எல். கே. ஜி. படிக்கும் எங்கள் பிள்ளை பள்ளியில் எல்லாவற்றிலும் முதலாவதாகத் திகழ வேண்டும் என்ற பேராசையுடன் அவனைப் போட்டு வாட்டி எடுத்துக் கொண்டிருந்தோம். ஒரு நாள் தூக்கத்தில் ''once a crow was very thirsty'' என்று ஆரம்பித்து, கதை முழுவதையும் சொல்லி முடித்தான். ரொம்பப் பரிதாபமாக இருந்தது. இப்போது எங்கள் தீவிரம் வெகுவாகக் குறைந்து அவனை அவனுடைய இயற்கையான போக்கில் விட்டுவிடுகிறோம்.

ஜே. திலகவதி, கோவை-2

### மானம் போனது!

தலைதீபாவளிக்கு மாமனார் வீடு சென்றிருந்த சமயம், உண்ட மயக்கத்தில் மதியம் சற்றே கண்ணயர்ந்தேன். கை மோதிரம் கழன்று தண்ணீரில் விழுவதுபோல் கனவு. 'மோதிரம்! மோதிரம்!' என்று அலறியபடியே கண் விழித்தேன். மைத்துனி துடுக்காய்ச் சொன்னாள் : 'கவலைப்படாதீர்கள். மோதிரத்துக்கு ஆர்டர் கொடுத்தாயிற்று !' அவமானம் தாங்கவில்லை எனக்கு. எவ்வளவு சொல்லியும் வேட்டகத்துப் பட்டாளம் உண்மையை நம்ப மறுத்துவிட்டது.

எம். ஆர். வெங்கடேஷ், புதுடெல்லி-58



''நான்கு வருடங்களுக்குப் பிறகு என் குழந்தைக்கு ஒரே ஒரு எல்.கே.ஜி. சீட் அட்மிஷன் தர முடியுமா?''

''ஏன்?''

''நீங்க சொல்றதைப் பொறுத்துத் தான் நான் கல்யாணம் செய்துக்கலாமா, வேண்டாமான்னு முடிவு செய்யணும்''.

ஏ. வி. தேவன்

### கிடைத்தது கிண்டி

இரவு ஒரு மணிக்குச் சமையல் அறைக்குப் போன என் பெரியம்மா அங்கே தூங்கிக் கொண்டிருந்த சமையல்கார அம்மாள், 'அழுக்குக் கூடை, அழுக்குக் கூடை' என்று தூக்கத்தில் உளறவும் ஓசைப்படுத்தாமல் அழுக்குக் கூடையைக் குடைந்து பார்த்தாள். அதில் கிடந்தது காணாமல் போயிருந்த வெள்ளி கிண்டி. மறு நாள் பளபளவென்று தேய்க்கப்பட்டு வைத்திருந்த அந்த கிண்டியைப் பார்த்ததும் சமையற்கார அம்மாளின் முகம் போன போக்கை இன்னும் நாங்கள் மறக்கவில்லை !

ராஜலக்ஷ்மி, பெங்களூர்-39

### கண்மணிக் கனவு

ஒரு பண்டிகை தினத்தன்று சட்டில் பாயசத்தை வைத்துக் கொண்டு ருசித்துச் சாப்பிட்டவாறே தூங்கிவிட்ட என் இரண்டு வயது மகன் எழும் சமயத்தில், கண்ணைத் திறக்காமலே சட்டு எதிரே இருப்பதாக எண்ணி, படுக்கையில் கையை இட்டு அகங்கையையும், புறங் கையையும் நக்கிச் சப்புக் கொட்டிய குழந்தைத் தனத்தை இன்றும் நினைத்து ரசிப்பதுண்டு.

நளினி வேணுகோபாலன், மேட்டூர் அணை

### ஆபீஸ் ஞாபகத்தில்

தொலைபேசி நிலையங்களில் இரவு வேலை செய்பவர்கள் கண் அயர்ந்துவிட்டால் அவர்களை எழுப்ப 'அலாரம்' உண்டு. தொலைபேசி நிலையத்தில் வேலை செய்யும் என் நண்பர் வாட்ச் ரூமில் தூங்கிக் கொண்டிருந்தபோது திடீரென்று அலாரம் அடிக்க அவர் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து ''போர்டு எங்கே? ஹெட் செட் எங்கே?'' என்று பதறி ஓட ஆரம்பித்துவிட்டார். அந்த அமர்க்களத்தில் விழித்துக் கொண்ட நாங்கள் விழுந்து விழுந்து சிரித்துவிட்டு அவருக்கு விழிப்பூட்டினோம்.

இரா. செல்வசுப்பிரமணியன், நாகர்கோவில்-1

ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:

**சுப. அழ. பழனியப்பன்**

**54, காந்தி ரோடு,**
**உடையார் காலனி,**
**மன்னார்குடி-614001**

சென்ற வாரம் :

வசுவுக்கும் தனக்குமிடையே கடந்த ஓராண்டில் மலர்ந்து, வளர்ந்து இன்று உச்ச கட்டத்தை அடைந்திருந்த காதலைப் பற்றி அலுவலகத்தில் அரவிந்தன் எண்ணிக் கொண்டிருந்தான். அன்று வசுவின் பிறந்த நாள். அவனை இரவு சாப்பிட அழைத்திருந்தாள். அவள் குடும்பம் முழுவதும் இன்று அபூர்வமாய் அவள் வீட்டில் கூடியிருக்கும். ஆபீஸ் விட்டுப் போக ஆவலாய் இருந்தான் அரவிந்தன்.

அன்று அலுவலக சேர்மனும் அபூர்வமாய் பம்பாயிலிருந்து அரவிந்தன் வேலை பார்த்த சென்னை கிளைக்கு விஜயம் செய்திருந்தார். இப்போது சேர்மனுடன் அதிக பரிச்சயம் இல்லாவிட்டாலும் அரவிந்தன் தன் இன்றைய நல்ல நிலைமைக்குக் காரணம் அவரே என்று உணர்ந்து அவரிடம் மதிப்பும் மரியாதையும் நன்றியறிதலும் கொண்டிருந்தான். அவன் அப்பாவும் சேர்மனும் நெருங்கிய நண்பர்களாய் இருந்தார்கள். இரு குடும்பங்களும் சேர்ந்து ஊட்டிக்குப் போனதையும் சேர்மன் மனைவி கோமளியும், மகள் மாயாவும் அடிக்கடி தன் வீட்டுக்கு விஜயம் செய்ததையும் எண்ணிப் பார்த்தான் அரவிந்தன். அப்பா காலமானபோது அன்னை ருக்குக்குச் சமாதானம் சொல்லி, பணம் கொடுத்து உதவியவர், அரவிந்தனின் மேல்படிப்புக்கு உதவி வேலையும் கொடுத்தவர் இந்தச் சேர்மன் தான். அவர் மனைவி காலமாகிவிட்டார். மகள் மாயாவை ஒரு முறை பம்பாயில் சந்திக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

அலுவலக கிளை மானேஜர் ஆராமுதன்; சேர்மன் அழைப்பதாக நடுங்கியவாறே கூற, மனத்தில் தோன்றிய வசுவின் நினைவைச் சிரமத்துடன் அகற்றிவிட்டு சேர்மன் அறைக்குள் சென்றான் அரவிந்தன்..

அன்றிரவு வசுமதி வெகு நேரம் அரவிந்தனுக்காகக் காத்திருந்துவிட்டு, கோபத்தில் சாப்பிடாமலே படுக்கப் போனாள். ஆனால் அவளால் தூங்க முடியவில்லை.

## 2

**மா**யா அலமாரியிலிருந்து எடுத்து எடுத்து, பார்த்துப் பார்த்துப் போட்ட ஜார்ஜட், ஷிபான்; ஆர்கண்டி; நைலக்ஸ்; டெரின் புடவைகள் கட்டிலின் மேலும் கீழுமாய் வண்ணக் கலவையில் கும்பாரமாகக் கிடந்தன. சிகப்பு, ரத்தச்சிகப்பு, மிளகாய்ப் பழ சிகப்பு, நீலம், மயில் கழுத்து நீலம், வெளிறிய நீலம், இளம் பச்சை, பச்சை, கிளிப் பச்சை, மஞ்சள், கனகாம்பரம், ஊதா வெள்ளை....

ஒரு விலாவில் ஒரு கையை ஊன்றி, இன்னொரு கையால் ட்ரஸ்ஸிங் மேஜையை அழுந்தப் பிடித்து நின்ற மாயாவுக்கு எந்த நிறப் புடவையும் அந்த நிமிடத்தில் பிடிக்கவில்லை. இடையில் இருக்கும் சாக்லேட் நிறமே தேவலை என்று பட்டது. இத்தனை நேரமாக புடைவைகளை எல்லாம் அள்ளி வெளியே போட்டது அனாவசியம் என்ற எண்ணம் அவளுள் உதிக்கவில்லை. மீண்டும் அலமாரியில் அடுக்கி வைக்க வேண்டுமே என்ற அலுப்பும் தோன்றவில்லை. சரோஜி எதற்கு இருக்கிறாள்? அவளைப் பார்த்துக் கொள்ள மட்டுமா? புடைவைகளையும்தான்.

அறையை விட்டு நகரும்போது திடீரென்று இரத்தச் சிகப்பு கண்ணில் அறைந்தது. மறு கணம் அந்தப் புடைவையை உருவினாள். மாற்றிக் கொண்டாள். கட்டியிருந்த சாக்லேட் கருணையாகக் காலடியில் வீழ்ந்து கிடந்தது.

கடந்த ஒரு மணி நேரமாக அவளுக்கு ஒரு தனி உற்சாகம். சமையற்காரி தயாரித்த பூஸ்ட்டை அப்பாவே தம் கைப்பட ஆற்றி ஆற்றித் தந்திருக்கிறார். முதலில் மௌனமாய் முரண் பிடித்த மாயா, அப்பாவின் நெகிழ்ச்சியான வற்புறுத்தலுக்குப் பிறகு, ஒவ்வொரு வாயாகப் பருகியிருக்கிறாள். அவ்வளவுதான். ஒரு தெம்பும் உற்சாகமும் பிறந்துவிட்டன.

ஆனால் அவளுக்கு ஒன்று மட்டும் புரியவில்லை. அப்பா ஏன் தம் கம்பெனியை உதறிக் காலடியில் போட்டுவிட்டு, பிற்பகல் இரண்டரை மணிக்குத் தூக்க மயக்கத்தில் இருந்த அவளை உற்சாகப்படுத்தினார்? நான்கு மணிக்குத் திரும்பி வரப் போவதாகக் கூறிவிட்டுச் சென்றார்? சமையற்காரி ராஜம்மாவிடம் கேட்டுப் புண்ணியமில்லை. அவளுக்கு எதுவுமே தெரியாது. நன்றாகச் சமைப்பாள். கொத்தவரைக்காய் உசிலி செய்வதில் ஒலிம்பிக்ஸ் கோல்ட் மெடல். மற்றபடி அவளுக்கு எதிலும் தகர, அலுமினியம்கூடக் கிடையாது. அவளுக்குத் துணையாக இருந்து வேலை கெட்ட வேலைகளில் கழுத்தை அறுக்கும் சரோஜிக்கும், அப்பாவின் அவசர வருகைக்கும் அவசர வெளியேற்றத்துக்குமான காரணம் என்ன என்று தெரிய நியாயமில்லை.

**பி.வி.ஆர்**

மாயா ஒரு தடவை ஆள் உயரக் கண்ணாடியில் தன்னை முழுமையாகப் பார்த்துக் கொண்டாள்.

ரத்தச் சிகப்பு கண்ணாடியை ஊடுருவிக் கொண்டு அவளைத் தாக்குவது போன்ற பிரமை. எல்லாமே சிகப்பாய்த் தெரிய எல்லாமே ரத்தமாகக் கொட்ட மாயா ஒரு சில கணங்கள் விநோதமான புல்லரிப்பில் சிலிர்த்துப் போனாள். அவளுடைய நுங்கு போன்ற வழுவழுப்பான மேனியின் பொன்னிறம் மனத்தையோ கண்ணையோ தொடவில்லை. நெற்றியின் சிகப்புப் பொட்டு, கார்னட் காது அணிகள், சிகப்புச் சோளி, சிகப்புக் கடிகாரப் பட்டை...

எல்லாமே சிகப்பு மயம்.

திடீரென அஸ்தமன சூரியன் மனக் கண் எதிரே நிற்க, மாயா பால்கனிக்கு ஓடினாள். சுவரில் சாய்ந்து கீழே, ரொம்பவும் கீழே வெள்ளித் தகடாய்த் தளதளக்கும் நீலக் கடலைப் பார்த்தாள். ஏமாற்றம். சூரியன் இன்னும் இறங்கவில்லை. கடலைப் பார்த்தவளுடைய கண்களுக்கு சின்னஞ்சிறு தோணிகள் ஓரிரு விசைப் படகுகள் அங்குமிங்குமாய் அலைவது தெரிந்தது. சற்றே நிமிர்ந்து பார்த்தபோது, வலது புறத்தில் தூரத்தே சில பெரிய கப்பல்கள் நிற்பது தெரிந்தது. இடதுபுறத்தில் கண்ணுக்கெட்டிய தூரமெல்லாம் கட்டிடங்கள். சின்னதும் பெரிதுமாய் குள்ளமும் உயரமுமாய் உறைந்து போன, மனிதன் கட்டிய மலைத் தொடர். மெரைன் ட்ரைவ் ஒரு கறுப்பு ரிப்பனாகத் தெரிய,

ஓடும் வாகனங்கள் தீப்பெட்டிகளாகத் தோன்றின.

எவ்வளவு நேரம் மாயா அப்படி நின்றாளோ, அவளுக்கே தெரியாது.

வீட்டில் சத்தம் இல்லை. ஆள் அரவம் கேட்கவில்லை. சரோஜி வெளியே எங்காவது போயிருக்க வேண்டும். ராஜம்மா தன் வேலையைத் தாற்காலிகமாக முடித்துவிட்டுச் சமையலறைக்கு வெளியே, தன் நான்கரை அடி உயரத்தை மூன்று அடிக்குக் குறுக்கி, கால்களை மடித்து ஒருக்களித்து ஓய்வெடுத்துக் கொண்டிருக்க வேண்டும்.

திடீரென்று தன் கண் முன் வெண் பனி போல ஏதோ படருவதை உணர்ந்த மாயாவின் உடல் நடுங்கியது. நரம்புகள் தளர்ந்தன. பற்களால் கீழுதட்டைக் கடித்துக் கொண்டாள். பால்கனிச் சுவரிலிருந்து கை தானாக விடுவித்துக் கொண்டது. நகர்ந்தாள். கால்கள் பின்னின. நான்கு அடி தூரத்திலுள்ள அவள் படுக்கை அறை எங்கோ வெகுதொலைதூரத்தில் அடையவே முடியாதஎல்லையில் இருப்பதாக பயமுறுத்தியது. அடித் தொண்டையிலிருந்து —

''அம்மா!'' என்ற ஓசை பலம் இழந்து, ஜீவன் இழந்து அவளுடைய காதுக்கு மட்டுமே ஒலிக்கக் கூடிய அலையாக வந்து மோதியது.

அவள் கட்டிலை எப்படியோ நெருங்கிவிட்டாள். கால்களில் புடைவைகள் நெருடியதை அவள் உணரவில்லை. மூடின கண்ணிதழ்களுக்குள் எல்லாம் சிவப்பு மயம். கட்டிலில் விழுந்தாள். கண்ணிதழ்ச் சிகப்பிலிருந்து தப்பித்துக் கொள்ள, கண்களை அகலமாய்த் திறந்தாள். வலித்தது. இன்னும் சிகப்பு மறையவில்லை. திறந்திருந்த கதவுகள் வழியாகப் பார்த்தாள்.

புதுமையான செம்பிழம்பு கண்களைத் தாக்கியது. அவள் விரும்பிப் பார்க்க ஓடிய அஸ்தமன சூரியன் இப்போது அவளைப் பயத்திலும் பீதியிலும் ஆழ்த்தியது.

உறக்கம் இல்லை.
விழிப்பு இல்லை.
உறங்கிவிட்டதான பிரக்ஞை.
விழித்திருப்பதாகப் பிரமை.

---

மனைவி: ''அதான் சட்டசபைத் தேர்தலில் சுயேட்சையாக நின்று ஜெயிச்சுட்டீங்களே... இன்னும் என்ன கவலை உங்களுக்கு?''

கணவன்: ''எங்கள் கட்சியில் சேருங்கன்னு இன்னும் ஆளுங்கட்சியிடமிருந்து அழைப்பு வராத கவலைதான்!''

உ. ராஜாஜி

---

அவளுடைய தந்தை தாரக்ராம் அவளுடைய கட்டிலின் அருகே வந்து நின்றபோது அவள் அவரைப் பார்த்தாள். ஆனால் அவர் தெரியவில்லை.

எங்கே எதை அவள் பார்க்கிறாள்? மாயாவின் கண்களுக்கு எது எங்கே தெரிகிறது?

''மாயா... மாயா டார்லிங்...''

அவருடைய அழைப்புக்குப் பதிலாகமாயா கண்களை மூடிக் கொண்டாள்.

• • •

''ஓ, டியர் டார்லிங், மாயா!''

தாரக்ராம் பல முறை கொஞ்சினார். கட்டிலைச் சுற்றி வந்தார். இண்டியன் ஏர்லைன்ஸ் மீது அடங்காத கோபம் மூண்டது. சென்னை விமானம் ரத்து. ஆனால் இதை ஏன் அவரிடம் ஏற்கனவே சென்னையிலிருந்து அரவிந்தன் டெலக்ஸ் மூலமோ டெலிபோன் மூலமோ தெரிவிக்கவில்லை? ஒருவேளை டெலக்ஸ் வேலை செய்யவில்லையோ? அல்லது டெலிபோன் கிடைக்கவில்லையோ?

கையிலிருக்கும் புகைக் குழாயைப் பார்த்தார். புகையிலை எப்போது அணைந்தது? லைட்டரால் பற்ற வைத்தார். ஒரு சோபாவில் உட்கார்ந்தார்.

என்ன செய்ய?

அரவிந்தன் தகவல் கொடுப்பானா?

வருவானா?

அல்லது வரவே மாட்டானா?

திடீரென்று ராஜம்மாவின் குரல் கேட்டது. ஊமைப் பார்வை பார்த்துக் கொண்டிருந்த தாரக்ராம், 'என்ன?' என்ற தோரணையில் அவளைப் பார்த்தார். அவளுடைய சுருங்கிய நெற்றியில் விபூதிக் கீற்று ஒரு தெம்பையும் தைரியத்தையும் அளிப்பதாகவே பட்டது.

''சாப்பாடு ரெடி...''

''நான் குடிக்கப் போகிறேன்...''

''சரி.''

''முந்திரிப் பருப்பு வறுத்து வையுங்கோ.''

''சரி.''

''மாயா தூங்கறா போலிருக்கு.''

''அப்பறமா எழுப்பி சாதம் போடறேன்.''

''அவன் வரவில்லை.''

''ஸ்வீட்டெல்லாம் அப்படியே இருக்கு.''

''நாளைக்கு வருவான்... நாளைக்கு நிச்சயம் வருவான்.'' அவருக்கு அவர் மீதே நம்பிக்கை பிறக்கவில்லை.

'' வேறே நல்ல ஸ்வீட் பண்றேன்.''

''அவன் என் சிநேகிதனோட பிள்ளை.''

''சொன்னேளே.''

''ரொம்ப நல்லவன்... சாது.''

''மாயாவுக்கு ஏத்தவன்.''

''அவனோட அம்மா மகாலட்சுமி மாதிரி இருப்பா.''

''ரெண்டு வர்ஷம் முன்னே காலமானா இல்லியா?''

''அவனும் இதோ இவளும் பாலும் பாத்திரமும் மாதிரி...'' தாரகராம் சுவரில் இருக்கும் கோமளியைக் கண்ணால் சுட்டிக் காட்டினார்.

''கோமளி இருந்தா உங்களுக்கு இப்படி மனசிலே சுமை இருந்திராது...''

''குழந்தைகளுக்கு முலைப்பால் கொடுக்காம இருந்தாத்தான் ப்ரெஸ்ட் கான்சர் வரும்னு நான் படிச்சிருக்கேன்... ஒரே பெண்ணைப் பாலூட்டி வளர்த்தவளுக்கு... உம்... என்ன செய்யறது?''

''விதிட்டே எதிர் விளையாட்டு விளையாட முடியறதில்லையே...''

'' மாயாவை அவன் நன்னா வைச்சுப்பான்ங்கிற நம்பிக்கை எனக்கு இருக்கு...''

''நல்லவன். சாது. வைச்சுப்பான்.... மாயாவுக்கு ஒரு குறையும் வைக்கமாட்டான்...''

''ஒரு நா என் எடத்திலே அவன் இருப்பான்... இதே மலபார் ஹில்ஸ்லே இதே அரண்மனையிலே ரெண்டு பேரும் இருப்பா... ஆனா, ஆனா அதைப் பார்க்க நான் இருப்பேன்னு தோணலே.''

''குடிக்கிறதை நிறுத்தணும்னு டாக்டர் சொல்லியிருக்கார்...''

'' அந்த டாக்டரே என்னோட சேர்ந்து வீட்லேயும் கிளப்லேயும் குடிக்கறார்.''

''வாத்தியார் பையனுக்குப் பாடம் சொல்லித்தான் தரார்... பரீட்சை எழுதறதில்லே.''

''கோமளி போயாச்சு... நான் இருக்க வேண்டிய அவசியம் இல்லே... நான் விதியோட போய்க்கறேன்...''

''மாயா இருக்காளே...''

'' அவ அவன்கிட்டே போய்ட்டா, அப்புறம் எங்கிட்டே யார் இருக்கப் போறா?''

இருந்தாலும் குடிக்கப்படாது.''

''முந்திரிப் பருப்பு...''

''வறுத்துத் தரேன்... கொஞ்சமாக் குடியுங்கோ...''

'' நான் மத்தியானம் போனப்புறம் மாயா ஏதானும் கேட்டாளா? இல்லே ஏதானும் சொன்னாளா?''

''இல்லே... நான் நாலரைக்கு ரூமுக்குள்ளே போனப்ப அவ பால்கனியிலே நின்னுண்டிருந்தா... நான் பின்னாலே நிக்கறதைக் கவனிக்கலே...''

'' டிபன் கொடுக்கலியா ?''

''நீங்களும் வரலே... அவனும் வரலே... ரெண்டு பேரும் வந்தப்றம் எல்லார்க்குமா டிபன் வைக்கலாம்னு இருந்தேன்.... அப்புறம் மறுபடியும் வந்தப்ப மாயா படுத்துண்டிருந்தா...''

'' என்ன செய்ஞ்சேள்?''

''அலமாரிப் புடவை எல்லாம் தாறுமாறாக் கெடந்தது. ஒவ்வொண்ணா எடுத்து, மடிச்சு வைச்சேன்.''

''மெட்ராஸுக்கு நான் போன் பண்ணினா என்ன?''

''ஒரு நாள் பார்ப்பமே... மணி எட்டு அடிச்சாச்சு.''

'' சரி, முந்திரிப் பருப்பு வறுத்துத் தாருங்கோ...''

ராஜம்மா மௌனமாய்த் திரும்பினாள்.

இந்த ராஜம்மா இல்லாவிட்டால் தாரக்ராம் என்ன செய்திருப்பார்? பணத்தால் எத்தனை பேர்களை வேண்டுமானாலும் அவரால் வாங்க முடியும். ஆனால் உண்மையான அன்பையும், வாஞ்சையையும், அபிமானத்தையும் வாங்க முடியுமா ? ஒரு அக்காவின் அன்பு. ஒரு தாயாரின் பாசம். நண்பனின் அக்கறை. ஆனால் சமையற்காரி, விதியோடு எதிர் விளையாட்டு விளையாட முடியாது என்பதைச் சொந்த வாழ்க்கையில் அனுபவ ரீதியாகக் கண்டு உணர்ந்து அறிந்தவள். எட்டு வயதுப் பிள்ளையும் முப்பத்தெட்டு வயதுக் கணவனும் ஒரே சமயத்தில் ரயில் விபத்தில் போவதென்றால் அது விதி, ராஜம்மாவை ஒரு பந்தாகப் பாவித்துக் காலால் எட்டி உதைத்து விளையாடும் விளையாட்டுதானே ? செய்தி அறிந்த உடனேயே கோமளி ஆந்தேரிக்கு ஓடினாள். ஸ்ரீராம் நகர் காலனியே ஆடிப் போயிருந்தது. அங்கிருக்கும் அவ்வளவு பேர்களுக்கும் வருடா வருடம் கிரமமாக ஆவணி அவிட்டம் நடத்திக் கொடுத்து, எந்த வீட்டில் எதற்கு அழைத்தாலும் முகம் சுளிக்காமல், அவசரத்தில் மந்திரத்தை முழுங்காமல்; செய்யும் தொழிலையே ஒரு வேதமாக, ஒரு உபநிஷத்தாகக் கருதிய ஒரு நல்ல மனிதருக்கு ஏன் இப்படிப்பட்ட முடிவு வரவேண்டும் ? பதிமூன்று நாட்களுக்கும் கோமளிதான் எல்லா ஏற்பாடுகளையும் செய்தாள். எந்தச் சமூகசேவையிலும் ஈடுபட்டிருந்திராத அவளை, எந்த சமூக சேவையையும் உளமாறச் செய்தறியாத பிரபல சமூக சேவைக்காரிகள் பாராட்டினார்கள். பதிமூன்று நாட்களுக்குப் பிறகு ராஜம்மாவைக் கோமளி வீட்டுக்கே அழைத்து வந்தாள். விபத்தின் பயனாய்க் கிடைக்கவிருக்கும் நஷ்டஈடை, துரிதமாக வாங்கிக் கொடுத்து ஒரு வங்கியிலும் முதலீடு செய்ய உதவி செய்தாள். அதன்பின் ராஜம்மா அந்த வீட்டு ராஜம்மாவாக மாறிவிட்டாள். கோமளியின் தாய் மாமா வழியில் ஏதோ ஒரு எள் அளவு உறவு முறை இருந்தாலும் உறவைக் கோமளி மதிக்கவில்லை. மனிதத் தன்மைகளையே மதித்தாள்.

அந்தக் கோமளியும் இந்த ராஜம்மாவுடன் இப்போது இருந்திருந்தால் ராஜம்மா சொன்னது போல அவருக்கு இந்தச் சுமை ஏற்பட்டிருக்காது. அல்லது சுமையின் கனத்தை அவர் இவ்வளவு தூரம் உணர்ந்திருக்கமாட்டார்.

ராஜம்மா முந்திரிப் பருப்பை ஒரு பீங்கான் தட்டில் வைத்துவிட்டுத் திரும்பினாள்.

''நீங்க பலகாரம் பண்ணினேளா?''

''மாயா இன்னும் சாப்பிடலே. நீங்க இன்னம்...''

'' நான் எடுத்துப் போட்டுக்கறேன்.''

''சரி.''

'' ஒரு கிண்ணத்திலே மோர் சாதம் எடுத்து வைச்சுடுங்கோ.''

''சரி.''

'' மாயா எப்ப எழுந்து எப்ப சாப்பிடுவாளோ தெரியாது... நீங்க பலகாரம் பண்ணுங்கோ.''

''மாயா பால்கனியிலே நின்னுண்டு இருக்கா...''

'' சரி... டிஸ்டர்ப் பண்ண வேண்டாம். சமயம் பார்த்துக் கொடுங்கோ.''

''சரி. நான் பார்த்துக்கறேன்.''

'' உங்களுக்கு என்ன தோணறது ?''

'' எதைப் பத்தி ?''

'' நான் செய்திருக்கிற ஏற்பாடு ?''

'' உங்க பழைய சிநேகிதரோட புள்ளே... கோமளியோட சிநேகிதியோட புள்ளே. நல்ல புள்ளேன்னு சொல்றேன். கெட்டிக்காரன்னு வேறே சொல்றேன்....ஆனு...''

'' சொல்லுங்கோ... எனக்கு இந்த விஷயத்திலே அட்வைஸ் பண்ண யாரும் இல்லே... கம்பெனி விவகாரம்னு நான் நீன்னு ஆயிரம் பேர் வருவா...''

'' இது குடும்ப விஷயமாச்சே...''

'' எனக்குக் குடும்பமே மாயாவும் நீங்களும் தானே... மாயாவை நீங்க உங்க பொண்ணு மனசாலே சுவீகாரம் எடுத்துண்டிருக்கேள்...''

''அவனும் என்னோட ஒட்டிக்சரு!''

'' உரிமையோட பேசுங்கோ... நான் உங்களைத் தப்பா எடுத்துக்கவே மாட்டேன்.''

'' மாயாவை அவனுக்குத் தெரியாது இல்லியா ?''

'' சின்னக் குழந்தைகளா இருக்கறப்ப ஒன்னு விளையாடியிருக்கா.''

''அந்த ஓடியாடின வெளையாட்டு வேறே... இது வேறே !''

'' நீங்க என்ன சொல்றேள்?'' என்றார் தாரக்ராம்.

'' நம்ம மாயாவுக்கு அவனைப் பத்தி இப்ப ஒண்ணும் தெரியாது... நீங்க சொல்றதைச் செய்ய அவளை ஏற்பாடு பண்ணிடுவேன்... ஆனு... ஆனு...''

'' சொல்லுங்கோ.''

'' அவன் முன்கூட்டியே மாயாவைத் தெரிஞ்சு வைச்சுக்கறது நல்லது. அதான் நியாயம், விவேகம்னெல்லாம் எனக்குத் தோணறது.''

'' நான் எல்லாத்தையும் நன்னு யோசிச்சப்றம் தான் இப்படி ஒரு முடிவுக்கு வந்தேன், ராஜம்மா !''

''இல்லேன்னு நான் சொல்ல வரலே. நம்ப கொழந்தை பிற்பாடு கஷ்டப்படப்படாது இல்லியா ?''

''முன்னாடியே தெரிஞ்சுட்டா... தெரிஞ்சுட்டா....''

''புரியறது...''

'' எனக்கு ரொம்ப நாள் இருப்போம்ங்கற நம்பிக்கை இல்லே, ராஜம்மா... என் கண்லே பட்ட ஆயிரமாயிரம் பிள்ளைகளிலே இவன் தான் ரொம்ப ஒசத்தின்னு என் மனசு சொல்றது.''

---

ஒரு நூல் இதயத்திலிருந்து வெளிவந்திருந்தால் அது மற்ற இதயங்களுக்குள் புகுவதற்கு வழிசெய்து கொள்ளும். —கார்லைல்.

எழுத்தாளன் ஆவதற்கு அறிவுத் திறன் மட்டும் போதாது. நூலுக்குப் பின்னால் ஒரு மனிதன் இருக்க வேண்டும். - எமர்ஸன்

தொகுப்பு: எஸ். விஜயா சீனிவாசன்



'' என்னதான் நல்லவன்னு நாம்ப ரெனைச்சாலும் சில சமயங்களிலே குணம் மாறிப் போறதும் உண்டு.''

'' டாக்டர்கூடச் சொன்னார், மாயா இப்படியே இருந்துடமாட்டாள்னு...''

''எந்த டாக்டரும் யாருக்கும் எப்போதும் அதைரியம் கொடுக்கமாட்டா...''

'' எனக்கு ஜோசியத்திலும் ஜாதகத்திலும் நம்பிக்கையே கெடையாது. இருந்தாலும், எந்தைத் தின்னு பித்தம் தெளியும்னு மெட்ராஸ்லே நெடுங்சாடியைப் பார்த்தேன்.... ரொம்ப கெட்டிக்காரன்னு சொன்னு...''

'' சரி.''

'' சந்திர தசை முடிஞ்சா எல்லாம் சரியா யிடுமாம்.''

''சரி.''

'' அது எப்ப முடியறதுன்னு கேட்கமாட்டேளா, ராஜம்மா ?''

'' எப்ப முடியறது ?''

''இன்னம் ஒரு வருஷமும் ஒரு மாசமும் இருக்காம்.''

'' அது முடியற வரை காத்திருக்கலாமே, இல்லியா ?''

'' என்னாலே முடியலே, ராஜம்மா.''

''அப்ப உங்க இஷ்டம் போல செய்யுங்கோ...மாயா கண் கலங்கப்படாது....''

'' மாட்டா... கண் கலங்க மாட்டா, ராஜம்மா !''

''நீங்க இவ்வளவு உறுதியா இருக்கறப்ப நான் என்ன சொல்ல முடியும் ?''

ராஜம்மா பின்வாங்கிச் சென்றுவிட்டாள்.

தாரக்ராம் மனம் குழம்பவில்லை. மாயாவுக்கு நன்மைதான் செய்கிறோம் என்கிற எண்ணம் மேலோங்கி நின்றது.

இன்னும் ஒரு வருடம், ஒரு மாதம் அவரால் காத்திருக்க முடியும்.

ஆனால் அதுவரை அரவிந்தன் காத்திருப்பான் என்று என்ன நிச்சயம்? அவன் சென்னையில் ஒரு ஜூனியர் லாயர்ப் பெண்ணுடன் நன்றாகவே பழகுகிறான் என்று கிளை மானேஜர் ஆராமுதன், வத்தி வைக்கும் நோக்கத்துடன் கூறியிருக்கிறார். அவனுடைய பெயர் அவருடைய நினைவில் முட்டவில்லை. அவளும் அரவிந்தனும் இன்னும் ஒரு வருடம் ஒரு மாதத்துக்குக் காத்திருப்பார்கள் என்று எப்படி நம்புவது ?

அரவிந்தனை விட்டால் வேறு யார் இருக்கிறார்கள்? என்றைக்கோ திட்டமிட்டு அவனை அவர் இன்றைய ஏற்பாட்டுக்காக முடிவு செய்து உருவாக்கியிருக்கிறார். அவன் இல்லை என்று கூறிவிட்டால் அப்புறம் மாயாவின் கதி என்ன ?

அரை பாட்டில் சாலியாகியது. மோர் சாதத்தை எடுத்துப் போட்டுக் கொள்ளச் சென்றபோது சுவர்க் கடிகாரத்தைப் பார்த்தார்.

பன்னிரண்டு அடிக்க இன்னும் பத்து நிமிடங்கள்.

டெலிபோன் அடித்தது.

பேசி முடித்தபின் ஏமாற்றத்தில் கோபம் வந்தது.

கோபத்தை மோர் சாதத்தின் மீது காட்டியிருக்கலாம். ஆனால் காட்டவில்லை.

(தொடரும்)

இரவு மணி ஒன்று. ஆசிரியர் சக்திநடராஜன் படுக்கையிலிருந்து எழுந்து உறக்கம் கலைந்தும், கலையாதவராய் நாற்காலியில் அமர்ந்தார். அருகில் அவருடைய மனைவி.

சுப்ரமணி என்ன சொல்லப் போகிறான் என்பதைக் கேட்க ஆசிரியரை விடவும் அவருடைய மனைவி ஆவலுடன் காணப்பட்டார். அகால நேரத்தில் கதவைத் தட்டி, அவர்களின் உறக்கத்தைக் கலைத்த சுப்ரமணி இன்னும் நின்று கொண்டிருந்தான்.

கூட்டுத்தொழிலில் ஏமாற்றப்பட்டவன் சுப்ரமணி. தனக்கு இழைக்கப்பட்ட கொடுமையை, அநீதியை ஆறாத குறையாக முறையிட்டான். நான்கைந்து வரிகளில் செய்தியின் கருக்கத்தைக் கூறினான்.

''இந்த விஷயத்திலே நான் சொந்தபந்தமெல்லாம் பார்க்க மாட்டேன் சுப்ரமணி. என் அக்காள் மகன் இவ்வளவு பெரிய துரோகியா இருப்பான்னு நான் நினைக்கவே இல்லே... ஏன் நிக்கிறே, உட்காரு!''

அவருக்கு எதிரில் இருந்த நாற்காலியில் சுப்ரமணி உட்கார்ந்தான். ஆசிரியர் சக்தி நடராஜன் அவர்கள்தான் தன் உடன்பிறந்த அக்காள் மகன் நடராஜனிடம் சுப்ரமணியை அறிமுகம் செய்து வைத்துக் கூட்டுத்தொழிலில் இறக்கியவர்.



# உன் முடிவுதான் என் முடிவு

அ. விஜய்வசிகாமணி

''என் அக்காள் எம்மேலே உள்ள பாசத்திலே தன் மகனுக்கும் நடராஜன்னு பேர் வச்சது. அந்த அயோக்கியன் என் பேரைக் கெடுத்துட்டான்!''

''பேர் வச்சதிலே என்னங்க தப்பு? குணநலன்கள் தான் முக்கியம். ஒரு கூட்டுத்தொழில்னு 'பார்ட்னர்ஸ்'களிடம் கணவனுக்கும் மனைவிக்குமிடையே உள்ள ஒற்றுமை இருக்கணும்னு நினைக்கிறவன் நான். ஆனால் என் பார்ட்னர் நடராஜனோ ஒரு எதிரியை விடக் கேவலமா நடந்துக்கிட்டிருக்கான். பல ஆயிரக்கணக்கிலே என்னை ஏமாற்றியிருக்கான். பூனா, பாம்பே, அஹமதாபாத் சேட்டுகளிடம் வாங்கிய தொகையில், இந்த நான்கைந்து வருஷத்திலே மட்டும் கிட்டத்தட்ட நாற்பத்தைந்தாயிரம், பத்து ஆண்டுகளாக எவ்வளவோ! இன்னும் ஜெய்பூர், உதய்பூர், ஜோத்பூர் சேட்டுகளிடம் வாங்கிய தொகையில் எவ்வளவு ஏமாற்றினானோ!'' கோபத்தினாலும், ஆதங்கத்தினாலும் அவனுக்கு மூச்சு இரைத்தது.

''அநியாயம்... அநியாயம்...'' என்றார் ஆசிரியர்.

''நானும் இந்தப் பத்து வருஷமா இவன் சொல்றதையெல்லாம் நம்பினேன். கொடுத்த தொகையை வாங்கிக்கிட்டேன். ஏதோ, போட்ட மொதலுக்கு லட்டி நஷ்டமில்லாம கிடைக்குதேன்னு இருந்துட்டேன்.''

''நீ சூது கபடு இல்லாம இருந்துட்டே சுப்ரமணி! எனக்கு என்னவோ ஒருமாதிரியா இருக்குது... சிகரெட் இருக்கா...?''

''மன்னிக்கணும். கொஞ்ச நாளாச்சு, விட்டுட்டேன்!''

''அதனாலே பரவாயில்லே. பையனைக் கடைக்கு அனுப்பறேன்!''

''அர்த்தராத்திரி, அதுவும் இந்தச் சின்ன ஊரிலே கடை திறந்திருக்குமா?'' சுப்ரமணி ஆச்சரியத்துடன் கேட்டான்.

''டவுனுக்குப் போயிட்டு வரட்டுமே. வயசுப் பையன். சைக்கிள்லே ரெண்டு கிலோ மீட்டர் போயிட்டு வர எவ்வளவு நேரம் ஆயிடப் போவுது?'' என்று கூறிவிட்டு அடுத்த அறைக்குச் சென்றார்.

''சில்லறை வேணுங்களா?'' என்று கேட்டுக் கொண்டே அவரது மனைவியும் எழுந்து ஆசிரியரின் பின்னால் சென்றார்.

ஒரு ஐந்து நிமிடம் அந்த அறையில் கிசுகிசுப்பதைப் போன்ற சப்தம். சுப்ரமணிக்கு எதுவும் விளங்கவில்லை. எழுந்து வந்த அவருடைய பையன் சுப்ரமணிக்கு வணக்கம் கூறிப் பதில் வணக்கத்தைப்



பெற்றுக் கொண்டு சைக்கிளுடன் வெளியில புறப்பட்டான்.

மீண்டும் தமது இருக்கையில் வந்தமர்ந்த ஆசிரியர், ''ம், எந்த இடத்திலே பேச்சை நிறுத்தினோம்?'' என்று சுப்ரமணியை வினவினார்.

''அவன் மோசடி எனக்கு எப்படித் தெரிஞ்சதுன்னு, போன மாதம், நம்ம கிட்டே தேங்காய் லோடு வாங்குகிற சேட் பம்பாயிலிருந்து தற்செயலா இங்கே வந்திருந்தார். பார்ட்னர் நடராஜன் அதுசமயம் உதய்பூர் லோடு கொண்டு போயிருந்தான். அவன் இருந்திருந்தால், அவன் தான் சேட்டைப் பார்த்துப் பேசியிருப்பான். இவனுடைய 'குட்டு' வெளிப்பட்டிருக்காது. இன்னும் பத்து வருடமானாலும் இவன் இப்படியே என்னை ஏமாற்றிக்கிட்டு இருந்திருப்பான்'' என்றான்.

''உங்க மேலேயும் தப்பு இருக்கு. ஒரு கூட்டுவியாபாரம்னு பார்ட்னரைக் கண்காணிக்கணும், சந்தேகக் கண்ணோடதான் பார்க்கணும்.'' என்றார் ஆசிரியரின் மனைவி.

''நாலைந்து வருஷத்திலே மட்டும் நாற்பத்தைந்தாயிரம்னு சொல்றீங்களே, எப்படி?''

''பாம்பே சேட் மூலம் சில உண்மைகள் தெரிந்த பிறகு இந்தி தெரிந்த என் கூட்டாளி ஒருத்தனைக் கூட்டிக்கிட்டு, பூனா, பம்பாய், அஹமதாபாத்தெல்லாம் போய் வந்தேன். பத்து வருஷத்திலே ஒரு ஒண்ணே கால் ஒண்ணரை லட்சம் போல என்னை ஏமாற்றியிருக்கான்!''

''ஏன் சுப்ரமணி! கேஸ் கோர்ட் அது, இதுன்னுப் போனா சேட்டுங்க உங்க பக்கம் நின்னு சாட்சி சொல்லுவாங்களா?''

''நிச்சயமாச் சொல்வாங்க. கோர்ட்டுக்குப் போனா ஜெயிக்கிறது நான்தான். குறைந்தது ஒரு லட்சமாவது கிடைக்கும்!'' என்றான். அதில் அவனுக்கு முழு நம்பிக்கை இருந்தது.

''அப்படித்தான் செய்யணும். அவனுக்கும் புத்தி வரும். ஊர் உலகத்திற்கும் அதுவே ஒரு பாடமா இருக்கும்.'' கொஞ்சம் இடைவெளி விட்டு மனைவியின் பக்கம் திரும்பி, ''இந்த விஷயத்திலே சுப்ரமணியின் முடிவு தான் என் முடிவும்!'' என்றார் ஆசிரியர் சக்தி நடராஜன். அவனுக்கு ஆறுதலாக இருந்தது.

''விடுங்க சார்! நடந்தது நடந்துபோச்சு இதைக் கோர்ட்லே போய்த்தான் தீர்த்துக்கணும்கிறது அவசியம் இல்லே. நாமே பேசித்

தீர்த்துக்கலாம் எனக்கு ஒரு எழுபதோ எழுபத்தைந்தோ கொடுத்துட்டுக் கூட்டை நீக்கி எழுதிக்குவோம். அது போதும் எனக்கு!'' என்றான்.

''ச்சோ! உன்னைமாதிரி ஒரு நல்லவனோடு அவனை இணைச்சு நான் தான் தப்பு பண்ணிட்டேன் சுப்ரமணி. வட நாட்டில் இருந்து வந்து இன்னும் நீ உன் பார்ட்னரைப் பார்க்கவே இல்லையா.?''

''பார்த்தேன். அதாவது நான் ஆறுமதா பாத்திலிருந்து வந்ததே ராத்திரி பனிரெண்டு மணிக்குத்தான். இப்போ இரண்டுமணி நேரத்துக்கு முன்னாலேதான் இந்தி தெரிந்தவர்னு சொன்னேனே, அவருக்கு நாமக்கல். என் பால்ய சிநேகிதன். அவனை சேலத்திலிருந்து அப்படியே நாமக்கல் அனுப்பிட்டு நான் இங்கே வந்துட்டேன் பஸ் ஸ்டேண்டில் இறங்கிநேரா நடராஜன் வீட்டுக்குத்தான் போனேன். லாரி தேங்காய் லோடு ஏற்றி தார் பாய் எல்லாம் கட்டி ஜெய்ப்பூர் புறப்படத் தயாராய் இருந்தது.

''நடராஜனைத்தனியாகக் கூப்பிட்டுவிவரத்தைச் சொல்லி, 'இவ்வளவுதானுடா நீ ?'ன்னுக் கேட்டேன். பதிலே பேசலே. உன் முகத்திலே காரித் துப்பினு என் எச்சில் அடுத்த விநாடியே விஷமா மாறிடும்டா! அதனாலே இமே துப்பறேன்'னு சொல்லிக் இமே துப்பிட்டு நேரா நடராஜனுடைய அண்ணன்கமலக் கண்ணன்கிட்டே போனேன்!''

''அவன் என்ன சொன்னான்?''

''அவனும் நீங்க சொன்ன மாதிரியேதான் 'இந்த விஷயத்திலே உன் முடிவுதான் என்னுடைய முடிவு'ன்னு சொல்லிட்டான். அப்புறம் புறப்பட்டு உங்களிடம் வந்தேன்'' என்றான்.

''அப்போ இது சம்பந்தமா வேற யாருக்குமே தெரியாது ?''

''ஊஹூம், தெரியாது!''

''கவலையை விடு! நான்கூட ஏதாவது சிக்கல் வருமோன்னு நினைச்சேன். சுலபமா முடிச்சுடலாம். எதற்கும் உன் நாமக்கல் நண்பன் முகவரியைக் கொடு. அவரையே மெயின் சாட்சியா வச்சு நாமே பேசி முடிச்சுக்கலாம். நீ கூப்பிட்டு அனுப்பினேன்னு யாரையாவது அனுப்பினா வருவாரில்லே?''

''நிச்சயமா வருவார். நேரில் போக வேண்டிய அவசியமே இல்லே. ஃபோன் இருக்கு. ட்ரங்கால் போட்டுச் சொல்லிடலாம்'' என்று கூறி ஃபோன் நம்பரைக் கூறினான் சுப்ரமணி. ஆசிரியரின் மனைவி நம்பரைக் காலண்டர் அட்டையில் குறித்துக் கொண்டார்.

அவருடைய மகன் சிகரெட்டுடன் வந்தான். சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டே, ''பார்த்துச் சொல்லிட்டியா?'' என்றார்.

''ம்'' என்று ஒற்றை எழுத்தில் பையனின் பதில்.

''எதைப் பத்திங்க, யாரிடம்?'' என்று கேட்டான் சுப்ரமணி.

''நைட் கடைக்குப் பால் ஊத்தறது சம்பந்தமா ஒருத்தரைப் பார்த்துச் சொல்லிட்டு வாடான்னேன்!''

ஆசிரியரிடம் நிறைய பசுக்களும், எருமைகளும் இருப்பதும் அவர் வீடுகள், கடைகளுக்குப் பால் அனுப்புகிறார் என்பதும் சுப்பிரமணிக்குத் தெரியும்.

''சரி, மணி என்ன சுப்பிரமணி?''

''இரண்டே கால்!''

''படுக்கிறியா இல்லே அப்படியே ஆத்துப் பக்கம் போய்ட்டு வரலாமா?''

''பாவம், அவருக்கு எங்கே தூக்கம் வரப் போகுது? பேசிக்கிட்டே ஆத்து வரைக்கும் போய்ட்டு வாங்க! போங்க, அழைச்சிட்டுப் போங்க!'' என்று ஆணையிட்டார் ஆசிரியரின் மனைவி.

வசிஷ்ட நதி. வருடத்தில் இடிரெண்டு ஒரு நாளோ இரண்டு நாளோ நீர்அருந்தி மறுநாளே பசித்திருக்கும், தவித்திருக்கும்நதி.

அணையின் மேற்பகுதியில் தெற்கு, வடக்கு இரு கரைகளிலும் அடர்ந்திருந்த தென்னந்தோப்புகள் இருட்டுக்கு மேலும் கருமை கூட்டின.

சற்றுத் தொலைவில் 'டார்ச் லைட்' உபயோகித்து யாரோ யாருக்கோ 'சிக்னல்' கொடுத்த மாதிரி இருந்தது. அந்த 'சிக்னலும்', ஆசிரியரின் மௌனமும் அவனது இதயத் துடிப்பைச் சற்றே துரிதப்படுத்தின.

அருகில் செல்லச் செல்ல யாரோ மூன்று பேர் அமர்ந்திருப்பது தெரிந்தது!

நெருங்கிச் சென்று முகத்தை பார்த்தபொழுது சுப்ரமணியின் மூச்சுத் நின்றியது.

அவர்கள் பார்ட்னர் நடராஜன் நடராஜனுடைய அண்ணன் கமலக் கண்ணன், மூன்றாவது ஆள் அவர்களின் தந்தை நாராயணன். சக்தி நடராஜனையும்சேர்த்து நான்கு ஆட்கள்.

உயிர் தப்புவதற்கு வழியே இல்லை என்பதை நிச்சயமாக யூகித்தான் சுப்ரமணி.

''சுப்ரமணி! இன்று உன்னுடைய முடிவு. நாளைய முடிவு உன் நாமக்கல் நண்பனுடையது.'' சக்தி நடராஜன் தம் திருவாய் மலர்ந்தருளினார்.

'அவனால் உங்களுக்கு ஒரு தீமையும் வராது அவனையாவது விட்டு விடுங்கள்' என்று கதற நினைத்தான். 'கதறி என்ன பயன்? இந்தக் சொலை பாதகர்களா கேட்கப் போகிறார்கள்.?'

பார்ட்னர் நடராஜன் ''அதோ பார்டா சுப்ரமணி!'' என்று கூறி ஒரிடத்தில் டார்ச் லைட் ஒளியைப் பாய்ச்சினான். அங்கே அக்காள் அக்காள் புருஷன் ஆகிய இருவரும் குழி வெட்டிக் கொண்டிருந்தனர். மொத்தம் ஆறு பேர் ஆயிற்று.

'ஒரே மூணைப்பாக எழுந்து ஏதாவது ஒரு திக்கில் ஓடினால்... முடியாது! அவ்வளவு

---

முயற்சிக்கும், வாய்ப்புக்கும் ஏற்படுகிற சந்திப்பைத்தான் அதிர்ஷ்டம் என்கிறோம். —பெஞ்சமின்.
தொகுப்பு: எஸ். விஜயாசீனிவாசன்.



# கோபத்திற்குப் பதில் பொறுமை

பட்டுப் புடவை பரிசுத்திட்டம்

போட்டி 38:



உங்கள் வாழ்க்கையில் கோபத்துக்குப் பதில் பொறுமையைக் கையாண்டதால் ஏற்பட்ட ஒரு நன்மையை விவரித்து எழுதுங்கள்.

ஒமே வெற்றிடத்தில் எழுதப் பெறும் ரசமான அனுபவம் பிரகரமாகிப் பரிசு பெறும் இந்த அரைப் பக்கத்தைக் கத்திரித்து அனுப்பும்போது உறையின்மேல் ''கோபத்துக்குப் பதில் பொறுமை'' என்று குறிப்பிடல் அவசியம். ஒருவருக்குக் குலுக்கல் முறையில் பட்டுப் புடவை

**முடிவு தேதி: 4-2-85**

இன்னும் 15 பட்டுப் புடவைகளே பாக்கி. இவற்றுள் ஒன்றை நிச்சயம் பெற்றுவிடுவது என்ற உறுதியோடுவாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறவும்.

என் பெயர் : ..............................

விலாசம் ..............................

..............................

இனிச்ச வாயர்களா இவர்கள்?!' என்று நினைத்து மௌனித்திருந்தான்.

''இந்தா இந்த கிளாஸைப் பிடி! விஷத்தை விஸ்கியில்ல சோடாவுக்குப் பதிலா கலந்திருக்கோம்!'' என்றான் கமலக் கண்ணன்.

சுப்ரமணி சன்னமான குரலில் ஆனால் தெளிவாகப் பேசினான்.

''கமலக் கண்ணா! இதை உன் தம்பி நடராஜனிடமே கொடு. அவன் தன் கையாலேயே எனக்கு இந்த விஷத்தைக் கொடுக்கட்டும். நீ அவனுடைய அண்ணன் என்கிற முறையிலேதான் எனக்குப் பழக்கம். திருவாளர் சக்தி நடராஜன் அவனோடு என்னைக் கூட்டில் இணைத்தவர் என்கிற அளவில்தான் பழக்கம். ஆனால் என் பார்ட்னர், அவன் உள்ளத்தில் விஷமும் உதட்டில் தேனும் வைத்திருந்தான் என்றாலும் கூட என்னுடன் பத்து ஆண்டுகள் பார்ட்னராக இருந்தவன். அதனால அவன் கையாலேயே நான் சாக விரும்புகிறேன்'' என்றான்.

கிளாஸ் கை மாறியது. நடராஜன் தன் கையாலேயே சுப்ரமணியிடம் விஷத்தைக் கொடுத்தான். சுப்ரமணி பெற்றுக் கொண்டான்.

''குடிச்சப்புறம் அஞ்சு நிமிஷம் கூடத் தாங்காது. அதனாலே யாரையாவது நினைக்கணும்னா குடிக்கிறதுக்கு முன்னாலே நினைச்சுக்க!'' என்றான் பார்ட்னர் நடராஜன்.

''சுப்ரமணி!'', ஆசிரியர் விளித்தார்.

''நான், குழந்தைகளுக்கு அதுவும் இளங் குழந்தைகளுக்குப்போதிப்பவன். நான் பொய் பேசக் கூடாது. அதனாலதான் உன் 'முடிவு' தான் என் முடிவு என்று ஆரம்பத்திலேயே கூறிவிட்டேன். கமலகண்ணனும் அதையே தான் கூறியிருக்கிறான்!'' என்றார்.

''ஆமாம்! நீங்கள் எல்லோரும் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள்! உன் மகன் மட்டும் எப்படியோ தப்பிப் பிறந்துட்டான்!''

இந்தக் குரல் யாருடையது? எங்கிருந்து வந்தது? ஏக காலத்தில் அனைவரும் திரும்பிப் பார்த்தனர். நடராஜன் டார்ச்லைட்டைப் பிரயோகித்தான். அங்கே போலீஸ் இன்ஸ்பெக்டர் இடது கையில் டார்ச்சும் வலது கையில் 'ரிவால்வரு'டனும் நின்றிருந்தார். உடன் இரண்டு கான்ஸ்டேபிள்கள் கையில் துப்பாக்கியுடன்.

''உன் மகன் எங்களுக்குத் தகவல் கொடுத்த பிறகுதான் அதுவும் எங்கள் ஏற்பாட்டுடன்தான் நீங்கள் கூறியனுப்பிய கமலக் கண்ணனுக்கும் மற்றவர்களுக்கும் தகவல் தரப்பட்டது!'' என்றார்.

குழிவெட்டிக் கொண்டிருந்த இருவரும் தப்பியோட முயன்றபொழுது இன்ஸ்பெக்டர் ஆகாயத்தை நோக்கிச் சுடவே அவர்களும் பயந்து நின்று விட்டனர்.

''சார், சார்... அதாவது...'' என்றார் ஆசிரியர் சக்தி நடராஜன்.

''அதாவது உங்களால் உங்கள் மனைவியை விட்டுப் பிரிந்திருக்க முடியாது. எனக்குத் தெரியும் ஆசிரியரே. அவர்களும் இன்னும் ஐந்து பத்து நிமிடங்களில் இங்கு வந்துவிடுவார்கள்; இரண்டு ஜவான்களை அனுப்பியிருக்கிறேன்'' என்றார் இன்ஸ்பெக்டர்.

# ஜெர்மன் டி.வியில் சீக்கியத் தீவிரவாதி

நா. பார்த்தசாரதி

ஒரு விமான நிலையத்திலிருந்து புறப்பட்டு மற்றொரு விமான நிலையத்தில் இறங்கி மாறிச் செல்கிற 'டிரான்ஸிட்' பயணிகளுக்கான ஏற்பாடுகளை 'லுப்தான்ஸா'க்காரர்கள் பிரமாதமாகச் செய்திருக்கிறார்கள். ஒரே சமயத்தில் பல்வேறு இடங்களுக்கு விமானங்கள் புறப்படவும், பல்வேறு இடங்களிலிருந்து விமானங்கள் வரவும் உள்ள பெரிய விமான நிலையங்களில் உங்கள் ஃப்ளைட் எண்ணும், கேட் எண்ணும் தெரிந்துவிட்டால் ஒரு சிரமமும் இல்லாமல் பயணம் செய்யலாம். பதற்றமோ, தடுமாற்றமோ குழப்பமோ நேரிடவே நேரிடாது.

நான் ஸ்டுட்கார்ட்டிலிருந்து ஃபிராங்க்ஃபர்ட் வந்து இறங்கிய இருபது நிமிஷத்திற்குள் அங்கிருந்து டஸ்ஸில் டார்ஃப் செல்கிற விமானம் புறப்படும் என்பதால் என் மனத்தில் பரபரப்பு இருந்தது. ஆனால் ஃபிராங்க்ஃபர்ட்டில் போய் இறங்கியதுமே லுப்தான்ஸா ஊழியர் ஒருவர் விமானத்தருகே வந்து யார் யார் டிரான்ஸிட் பயணிகள் என்று அக்கறையோடு விசாரித்து அவரவர்கள் போக வேண்டிய ஊருக்கான விமானத்தை அணுக எந்த செட்டுக்குப் போக வேண்டும் என்பதையும் சொல்லித் துரிதமாக அனுப்பினார். அவ்வளவு பெரிய விமான நிலையத்தில் தாமதமின்றி உடனே செட் எண் தெரிந்ததால்தான் கோட்டை விடாமல் அடுத்த விமானத்தைப் பிடிக்க முடிந்தது.

டஸ்ஸில் டார்ஃபில் இருந்து என் சொந்தப் பயணம் ஆரம்பமானது. மேற்கொண்டு நான் சென்ற ஐரோப்பிய நாடுகளுக்கான பயணத்தை அங்கிருந்துதான் தொடங்கினேன். தஸ்தூர் இஞ்ஜினியரிங் (இண்டர் நேஷனல்) இல் பணிபுரியும் — பல ஆண்டுகளாக ஜெர்மனியில் வசிக்கும் நண்பர் டி. ஆர். கோபாலன் டஸ்ஸில் டார்ஃப் விமான நிலையத்திற்கு வந்திருந்தார். அவருடைய மனைவியும், குழந்தைகளும் விடுமுறைக்குச் சென்னை சென்றிருந்ததனால் டஸ்ஸில் டார்ஃபில் அவருடைய ஃப்ளாட்டில் அவரோடு தங்கிக் கொள்ள ஏற்பாடாகியிருந்தது. அதுவரை என் ஜெர்மன் பயணத்தில் 'ஷாப்பிங்' என்று எந்த ஊரிலும் எதுவும் வாங்காததனால் அதையும் டஸ்ஸில் டார்ஃபிலேயே வைத்துக் கொள்ள முடிவு செய்தேன்.



டஸ்ஸல்டார்ஃபில் ஒரு பாதசாரிகள் பாலம்



கொலோன் ரோஸ்மண்டே விழா



○ பிரிண்டர்ஸ் டே உற்சாகம்

டஸ்ஸில் டார்ஃப் மேற்கு ஜெர்மனியின் எட்டாவது பெரிய நகரம். வடக்கு ரைன் வெஸ்ட்பாலியா மாநிலத்தின் தலைநகரமும் அதுதான். பெரிய தொழில் வளப் பகுதி. உருக்கு — இரும்பு சம்பந்தமான தொழில்களும், நிலக்கரிச் சுரங்கங்களும் நிறைந்த பிரதேசம். எலெக்ட்ரானிக்ஸ், கெமிகல், செயற்கை இழை, வர்ணங்கள், அலுமினியம் சம்பந்தப்பட்ட தொழில்களும் அதிகம். இது தவிர நெசவாலைகள், மோட்டார்கார், பெட்ரோலியம்சுத்திகரிப்பு ஆலைகள்ஆகியவையும் இந்த மாநிலத்தில் முக்கியமானவை. இந்நகரில் நாலைந்து நாட்கள் தங்கியிருந்தபோது மேற்கு ஜெர்மனியின் கலை,கலாசாரம், தொழில் முதலிய பலவற்றைப் பற்றி நிறைய விசாரித்துத் தெரிந்து கொள்ள முடிந்தது.

ஹனோவர் மேற்கு ஜெர்மனியின் மாநிலங்களில் ஒன்றான 'லோயர் சாக்ஸனி'யின் தலைநகரம். உலகம் முழுவதும் 'ஹனோவர்' நகரின் பெயர் தொழிற்சந்தைப் பட்டினம் என்ற முறையில் பிரபலமாகிவிட்டது. ஹனோவர் தொழிற்சந்தையில் ஒவ்வொரு வருடமும்-ஏதாவதொரு அந்நிய நாட்டைப் 'பங்காளி தேச'மாக அறிவிப்பார்கள். 1984ம் ஆண்டு ஹனோவர் தொழிற்சந்தைக்குப் பங்காளி நாடாக இந்தியா இருந்தது.

எதிர்பார்த்ததைவிடப் பிரமாதமாக இருந்தது என்று ஜெர்மன் பத்திரிகைகளும் ஜெர்மானியர்களும் ஹனோவர் தொழிற்சந்தையில் இந்தியாவின் பங்கு பற்றி உபசாரமாகச் சொன்னாலும் பல ஆண்டுகளாக ஜெர்மனியில் வசிக்கும் இந்திய நண்பர் ஒருவர் சில குறைகளைச் சுட்டிக்காட்டினார். ''இந்திய என்ஜினீயரிங் தயாரிப்புகள் ஓரளவு ஜெர்மானியர்களைக் கவர்ந்தது உண்மைதான். ஆனால் இந்திய அரங்கின் எல்லா அம்சமுமே சிறப்பாயிருந்ததாகக் கூற முடியாது. பல ஆண்டுகளுக்குமுன் ஐரோப்பிய மோட்டார் கம்பெனி ஒன்று வேண்டாம் என்று கைவிட்டுக் காலாவதியான ஒரு மாடலில் தயாரான இந்தியக் கார் ஒன்றை நவீன வோக்ஸ்வாகன் மோட்டார் கம்பெனியின் தாயகமான ஹனோவரில் கொண்டு வந்து காட்சிக்கு வைத்தது சிரிப்புக்கு இடமாயிருந்தது'' என்றார் அந்த நண்பர்.

அதே போல நான் டஸ்ஸில் டார்ஃபில் இருந்தபோது ஜெர்மன் டெலிவிஷனில் ''காலிஸ்தானின் வெளியுறவு மந்திரி'' என்று தம்மைத் தாமே கூறிக் கொண்ட ஒருவரின் பேட்டியை ஒளிபரப்பினார்கள். சீக்கிய தீவிரவாதியான அவரது வாதங்களை எதிர்த்து வாதிட ஒரு பத்திரிகையாளரை (இந்தியர் தான்) அனுப்பியிருந்தார்கள். காலிஸ்தான்காரர் உணர்ச்சிகரமாக அள்ளிக் கொட்டிய நெருப்பு வார்த்தைகளை மறுக்கத் தைரியமின்றிப் பயந்தபடி இருந்துவிட்டார் பத்திரிகையாளர். காலிஸ்தான்காரரும் தம்மை மறுக்க இடைவெளியே தரவில்லை. கையைக் காலை ஆட்டி முஷ்டியுத்தம் செய்வதுபோல் பேசி எதிர்த் தரப்பு வாதத்தை — ஓரிரு வார்த்தைகளுக்கு மேல்—கேட்கவே முடியாமல் செய்து விட்டார்.

**ஏழு நாடுகளில்**
**எட்டு வாரங்கள்**

ஹனோவர் தொழிற்சந்தையில் எப்படி இந்தியப் பகுதியின் ஒரு பிரிவு சரியான பிரதிநிதித்துவம் இன்றி விடப்பட்டதோ, அதே போல் இந்தக் காலிஸ்தான் வாதத்துக்கு — ஆணித்தரமான ஆதாரபூர்வமான பதில்கள் இருந்தும் — சொல்லாமல் விடப்பட்டது. பல விஷயங்களில் இந்தியத் தரப்பில் இப்படித்தான் நேர்ந்துவிடுகிறது. இதற்கெல்லாம் காரணம் நமது தூதரகங்கள் — தூதர்களின் மெத்தனப் போக்கும் — அஜாக்கிரதையும்— போதிய விழிப்புணர்ச்சியின்மையுமே ஆகும். தேச பக்தியுள்ள இந்தியர்கள் என்ற முறையில் இந்த டெலிவிஷன் நிகழ்ச்சியைப் பார்த்த போது நானும் நண்பர் கோபாலனும் வருத்தப்பட்டுக் குமைந்ததுதான் மிச்சம்.

ஹனோவர் தொழிற் சந்தையைத் தவிர மேற்கு ஜெர்மனியின் மற்ற சர்வதேச விழாக்களில் ஃபிராங்க் ஃபர்ட் புத்தகச் சந்தையும் பெர்லினில் நடக்கும் சர்வ தேசத் திரைப்பட விழாவும் புகழ்பெற்றவை. இவை ஆண்டு தோறும் தவறாமல் நடப்பவை.

ஜெர்மனியில் 1985ல் நடக்க இருக்கும் சர்வதேசச் சந்தைகளும், விழாக்களும் 1984 இறுதியிலேயே திட்டமிடப்பட்டுவிடுகின்றன. அதன்படி டஸ்ஸில்டார்ஃபில் சர்வதேச கால்அணிக்கானகாட்சியும்சர்வதேசப்படகுக் காட்சியும் நடக்க இருக்கின்றன.

இங்கு தேவைக்கதிகமாக உற்பத்தி ஆகி இருக்கும் சில பண்டங்களை — அந்த உற்பத்தி மிகுதியால் மார்க்கெட் விலை சரிந்துவிடக் கூடாதென்று கருதி அழித்துவிடுவது ஒரு வழக்கமாகி வருகிறது. ஐரோப்பியக் கூட்டுப் பொருளாதார அமைப்பின் அறிவுரையின்படி பொருளாதாரச் சந்தை நாடுகள் இதைச் செய்யும்படி நிர்ப்பந்தப்படுத்தப் பெறுகின்றன. முன்பு ஒரு முறை பல்லாயிரம் டன் தக்காளியை நிலத்தில் மறுபடி கொட்டி உழும்படி ஆயிற்றும். பால் உற்பத்தி தேவைக்கு மேல் அபரிமிதமாக இருக்கிறது என்பதற்காக இந்த ஆண்டு இரண்டேமுக்கால் லட்சம் கறவைப் பசுக்களைக் கொன்றுவிடும்படி யோசனை சொல்லப்பட்டிருக்கிறது. தேவைக்கதிகமான அமோகப் பழ உற்பத்தி காரணமாக இதே ஆண்டு எட்டு லட்சம் டன் பழங்கள் தேங்கிவிட்டன. அவற்றையும் அழித்துவிட யோசனை சொல்லப்பட்டிருக்கிறது. எதியோப்பியா போன்ற ஆப்பிரிக்க நாடுகளிலும், வேறு பல மூன்றாவது உலக நாடுகளிலும் கடும் உணவுப் பஞ்சம் நிலவும் போது ஈ.ஈ.ஸி.யின் இந்த யோசனைகள் மனிதாபிமானத்திற்கு விரோதமானவை என்று இதை எதிர்ப்பவர்களும் மேற்கு ஜெர்மனியில் நிறைய இருக்கிறார்கள். உதாரணமாக 'பால் நுகர்வோர் கூட்டமைப்பு' இம் முயற்சியை வெளிப்படையாகவே கண்டித்துள்ளது. ஐரோப்பியப் பாராளுமன்றத் துணைத் தலைவரே இதை எதிர்க்கிறார்.

மேற்கு ஜெர்மனியைத் தவிர ஆஸ்திரியா ஸ்விட்ஜர் லாந்து, லக்ஸம்பர்க், கிழக்கு ஜெர்மனி ஆகிய நாடுகளிலும் ஜெர்மன் மொழி முக்கிய மொழியாக இருக்கிறது. இந்த ஐந்து நாடுகளில் மேற்கு கிழக்கு ஜெர்மனிகளிலும் ஆஸ்திரியாவிலும் முழுக்க முழுக்க ஜெர்மன் மொழிதான். 'லக்ஸம்பர்க்'கிலும், ஸ்விட்ஜர்லாந்திலும் ஜெர்மனுடன் பிரெஞ்சு மொழியும் கலந்து இருக்கிறது. எனவே ஜெர்மானியக் கலாசாரம், ஜெர்மன் இலக்கியம் என்று வரும்போது அது மேற்கு ஜெர்மனிக்கு வெளியேயும் இருக்கிறது. என்றாலும் ஜெர்மனிக்கு வெளியே அந்நிய நாடுகளில் மேற்கு ஜெர்மனியின் மாக்ஸ்முல்லர் பவன், கதே இன்ஸ்டிடியூட் போன்றவையே ஜெர்மன் மொழியைக் கற்பித்து வருகின்றன. மேற்கு ஜெர்மனியில் உள்ள நூல் நிலையங்கள் கட்டாயமாகச் செலுத்தும் ஒரு வரியிலிருந்து வருவாகும் பெரும் தொகை எழுத்தாளர் நலனுக்குப் பயன்படுகிறது.

ஹைடில்பர்க் பிரிண்டர்ஸ் தினம், கோலோன் ரோஸ்மண்டே, மூனிச்பீர் விழா, ஒயின் விழா ஆகியவை புகழ்பெற்ற பாரம்பரியமான மேற்கு ஜெர்மன் விழாக்களாகும். பயிற்சி பெற்றுத் தேறிய அச்சுத் தொழிலாளி பிரிண்டர்ஸ் டே அன்று பல அலைக்கழிப்புக்களுக்கு ஆளான பின்பே சான்றிதழும் பயிற்சிப் பூர்த்தியும் பெற முடியும். கல்லூரிகளில் 'ராகிங்' மாதிரிதான்.

கட்டடங்களுக்கு நாம் பூமி பூஜை செய்யும் போது தேங்காய் உடைக்கிற மாதிரி புதுத் திட்டம், கட்டிடத் தொடக்க வானம் தோண்டுதல்களின்போது 'சாம்பைன்' பாட்டிலை உடைத்துத் திறக்கும் வழக்கம் மேற்கு ஜெர்மனியில் இருக்கிறது.

ஒரு கலியாணமாகாத — அல்லது கலியாணமான ஜெர்மன் பெண்ணிடம் சிவப்பு ரோஜாப் பூக்களைக் கொடுக்க முயலக்கூடாது. அதற்கு விசேஷ அர்த்தம் உண்டு. பூங்கொத்துக்களோடு ஜெர்மன் வீடுகளுக்குச் செல்வது மரியாதை. ஆனால் சிவப்புப் பூ விஷயத்தில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

டஸ்ஸில்டார்ஃபில் இருந்து பெல்ஜியம், நெதர்லண்ட்ஸ், இங்கிலாந்து, பிரான்ஸ், ஸ்விட்ஜர்லாந்து, ஆஸ்திரியா, யுனைடெட் அராப் எமிரேட்ஸ் வழியாக ஒரு மாத காலம் சுற்றிவிட்டு அப்புறம் இந்தியா திரும்புகிற மாதிரி என் பயணத் திட்டத்தை நானும் கோபாலனுமாக முடிவு செய்து அமைத்தோம். ஓர் அதிகாலை விமானத்தில் டஸ்ஸில்டார்ஃபிலிருந்து பெல்ஜியத்தின் தலைநகரான பிரஸ்ஸல்ஸுக்குப் புறப்பட்டேன்.

(தொடரும்)

**குடிசை:**

முப்பத்து மூன்றாவது மாடியில்
இருந்து எட்டிப் பார்த்து திருப்தியடைந்தார் கொத்தனார்.
"தொலைவில் தெரிந்த தன்
குடிசையை."

எம். அசோக் ராஜா
நன்றி : 'செந்தாரகை'






**பிலிப்ஸ்**

# இந்த 60W லாம்ப், 100W பல்பு தரும் ஒளியைத் தருகிறது.



மின் கட்டணத்தில் 24 ரூபாய் மிச்சம்.

## பிலிப்ஸ் ஆர்ஜென்ட்டா ஸூப்பர்லக்ஸ்.

ஆர்ஜென்ட்டா ஸூப்பர்லக்ஸ்-தேவையான இடத்திலே அதிக ஒளியைக் குவித்துப் பாய்ச்சும் வகையிலே பனிப்படலம்போல் பூச்சுள்ள சாளரம் கொண்டது. இப்படி குவித்த ஒளிக்கதிர் காரணமாக. 60W ஆர்ஜென்ட்டா ஸூப்பர்லக்ஸ். சாதாரண 100W பல்பு தரும் ஒளியினைத் தருகிறது.

நீடித்திருக்கும் ஆர்ஜென்ட்டா ஸூப்பர்லக்ஸ். உமது மின் கட்டணத்திலே. ஆண்டுக்கு 24 ரூபாய் சேமிக்கிறது. படிக்க. ஓவியம் தீட்ட. வரைய. நிட்டிங் செய்ய மிகச் சிறந்தது இந்த லாம்ப்.

40W மற்றும் 60W வகைகளில் கிடைக்கும்.

**பிலிப்ஸ் ஆர்ஜென்ட்டா ஸூப்பர்லக்ஸ்—**
**100W பல்பின் ஒளிதரும் 60W லாம்ப்.**

HTB-PEI-9727

**பிலிப்ஸ்—ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**



# சங்கீத விழாவில் வராந்தா ரசிகர்

"**போ**ன டிசம்பர் மாசம் உங்களைப் பார்த்தது...." என்று ஒரு வருடம் கழித்துப் பார்க்கும் நண்பரை வரவேற்றார் அவர்!

"பிள்ளை, பெண்கள் அமெரிக்கா, கானடா ஸௌதி அரேபியா என்று போய்விட்டார்கள். ஒரு சுற்று ஒவ்வொருவர் வீட்டிற்கும் போய் விட்டு வந்தால் ஒரு வருடம் ஆகிவிடுகிறது. ஒவ்வொருத்தர் வீட்டிலேயும் கர்னாடக இசை டேப்புகள் நிறைய குவித்து வைத்திருக்கிறார்கள். இருந்தாலும் சங்கீத சபைகளில் டிஸம்பர் மாதம் வந்து கேட்கிற மாதிரி வருமா?"

"ஆமாமாம். டிஸம்பர் பாட்டுக்குத் தனி மவுசுதான் இருக்கு!"

"பாட்டை விடுங்கள். சங்கீத சுற்றுலாவிலே காதில் விழுற விமர்சனங்கள், பேச்சுக்கள், சர்ச்சைகள் எந்த டேப்பில் கிடைக்கும்?" என்றார் வெளிநாட்டில் பிள்ளை, பெண்களுடன் டேரா அடித்துவிட்டு டிஸம்பருக்கு மதராஸ் வந்த பிரமுகர்.

"இன்னும் கொஞ்ச நாட்களில் பாட்டைப் போல் சர்ச்சைகளும் காஸெட்டில் பதிவாகி வந்துவிடும்" என்று நண்பர் அவருக்கு உற்சாகமூட்டினார்.

"கார்த்தாலே நடக்கிற சர்ச்சைகளைச் சொல்லவில்லை, ஸ்வாமி. காத்துவாக்கிலே காதில் விழுறதைச் சொல்றேன்.! அன்னிக்கு அகாடமி வராந்தாவிலே நின்று கொண்டிருந்தேன். உள்ளே கச்சேரி நடந்து கொண்டிருந்தது. வராந்தாவிலே சீசன்லே எந்த இடத்திலும் சான்ஸ் கிடைக்காது. மனம் உடைந்த பாகவதர் ஒருவர் சொல்லிக்கொண்டிருந்தார். 'என்ன ஸார், கச்சேரி! அரியக்குடி என்னிடம் சொல்லுவார், டேய் கிட்டு! எப்ப கச்சேரி செய்தாலும் பந்துவராளியிலே ஒரு கீர்த்தனம் பாடாமல் இருக்காதே'ன்னு' அரியக்குடிக்கு என் பாட்டிலே என்ன மதிப்புன்னு நினைக்கிறீர்கள்! ஒரு வருஷம் என்னைத் திருவையாறு உத்ஸவத்திலே பார்த்தார். பஞ்சரத்ன கோஷ்டி கானம் நடந்து கொண்டிருந்தது. 'டேய் கிட்டு. அது கிடக்கட்டும். இப்படி வந்து அந்த 'ஸீதாவரஸங்கீத ஞானமு' கீர்த்தனையைக் கொஞ்சம் பாடு. அதை நீ பாடிக் கேட்கணும். நானும் எவ்வளவோ பேரிடம் அந்தப் பாட்டைக் கேட்டிருக்கிறேன். உன் மாதிரி ஒருவரும் அவ்வளவு அழகுபடுத்திப் பாட முடியாதடா" என்பார் அரியக்குடி. ஆஹா! என்ன மேதை!" இந்த வார்த்தைகள் என் காதில் விழுந்தது. இந்த உரையாடலை யார் டேப் எடுப்பா சொல்லுங்கள்" என்றார்.

"இந்தச் சர்ச்சைகளைச் சொல்லுகிறீர்களா? ஹா, ஹா, ஹா. நான் என்னமோன்னு நினைச்சேன். சபாஷ். நிச்சய

எஸ்.வி.கே.

மாகவே கச்சேரிகளைவிட இந்த மாதிரி விமரிசனங்கள் பிரமாதம்'' என்று மேலும் காதைத் தீட்டிக் கொண்டேன்.

''பரவாயில்லையே. பாட்டைவிட டிஸம்பர் சீஸனில எதில் ருசி அதிகம் என்று நீங்கள் நன்றாய்த் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறீர்களே'' என்று நற்சாட்சிப் பத்திரம் கொடுத்தார்.

''நான் எப்போதாவது கச்சேரிக்கோ, டான்ஸுக்கோ போனாலும் மனைவியை ஹாலினுள் உட்கார வைத்துவிட்டு, நான் வெளி வராந்தாவில்தான் உலாவிக் கொண்டிருப்பேன்... என்ன ரஸமான பேச்சுக்கள் காதில் விழும் தெரியுமா ?''

''ஆமாம், இந்த வருஷம் விழாவிலே பட்டம் பெறுகிற வித்வான் பேச்சு ஆணித் தரமாய் இருந்ததே, கேட்டீர்களா... அல்லது அதுவும் வராந்தாவின் மூலம்தான் கேட்டேளா ?''

''அது தெரியாதா ? அங்கு பாகவதர் அவர் தலைமையுரையை வாசித்துக் கொண்டிருந்தார். என் பக்கத்தில் ஒரு ஸங்கீத நிபுணர், 'மியூஸிகாலஜிஸ்ட்'னு சொல்றாளே. அவர் சொல்லிக் கொண்டார். 'பாகவதர் பேச்சைக் கேட்டீர்களா ? எவ்வளவு ஆணித் தரமான அபிப்பிராயங்கள். அவரைத் தலைமை தாங்கத் தேர்ந்தெடுத்தவுடனே, நேரே என் வீட்டுக்குத்தான் வந்தார்... ''ஸ்வாமி! நீங்கள் என் தலைமை உரைக்கு விஷய தானம் செய்ய வேண்டும். நான் ஏதோ பாட்டைக் கற்றுக் கொண்டேனே தவிர பேச எனக்கு என்ன தெரியும்னு சாஷ்டாங்கமாய் நமஸ்காரமே பண்ணிவிட்டார்! என்ன செய்வது? தலைமை உரையை எழுதிக் கொடுத்தேன். அதைத்தான் இப்பொழுது அவர் படித்துக் கொண்டிருக்கிறார்.''

அவர் பக்கத்திலிருந்த ரஸிகர், ''என்னடான்னு பார்த்தேன். நான் பாகவதருக்குக் கச்சேரி ஏற்பாடு செய்கிறபோதெல்லாம் போயிருக்கிறேன். நாலுவார்த்தைஅவருக்குத் தெளிவா பேசத்தெரியாது. இப்படி சண்டப்பிரசண்டமாய்ப்பேசுகிறாரே என்று யோசித்தேன். உங்கள் கைவண்ணமா? அப்படிச் சொல்லுங்கள். ஆமாம், இதையெல்லாம் நீங்களே ஏன் பத்திரிகையிலே வாரா வாரம் விஷய தானமாய் எழுதக் கூடாது?'' என்றார்.

''எழுதறதுன்னு எவ்வளவோ எழுதலாம். இத்தனை வருஷமாய் எத்தெத்த மாதிரி பாடகசிம்மங்களைக் கேட்டிருக்கிறேன். உங்களுக்குத் தெரியுமா ? அரியக்குடி ஒரு தரம் கும்பகோணம் வந்திருந்தார். என் வீட்டுக்கு வந்து தண்டன் ஸமர்ப்பிக்காமல் அவர் போகமாட்டார். 'ராமானுஜம்! (அதுதான் அரியக்குடி ராமாநுஜ அய்யங்கார்) ''தாசரதே '' பாடிக் கேட்கணும்னு இருக்கு' என்றேன். 'என்னண்ணா இது, என்னமோ விண்ணப்பம் செய்யறமாதிரி கேட்கிறீங்க. 'தாசரதே' பாடுடான்னு கட்டளை கொடுக்காமல் ?... தம்பூராவைக் கொண்டாங்க. இப்பவே உங்க ஆசையை நிறைவேற்றினால்தான் எனக்கு நிம்மதியிருக்கும்'' என்றார். அன்னிக்கு ராமானுஜம் தோடி பாடி, 'தாசரதே' பாடினார் பாருங்கோ. அந்த மாதிரி நீங்கள்ளாம் கேட்டிருக்கவே முடியாது. அவர் கச்சேரியிலே பாடற 'தாசரதே'யே வேறு. அன்றைக்கு ராமானுஜம் பாடிக் கேட்டேன். அதுக்கப்புறம் இன்னி தேதி வரையிலும் யார் பாடியும் கேட்கப் பிரியப்படவில்லை. அந்த மாதிரி பாட்டை எல்லாம் கேட்டுக் கேட்டுப் புடம் போட்ட ரஸிகன் ஐயா ! தலைமை உரையில் ஆணித்தரமான அபிப்பிராயம் இல்லாம எப்படி இருக்கும் சொல்லுங்கள் '' என்று ஒரு பிரஸங்கமே செய்து ஜமாய்த்துவிட்டார்.

''ஆமாம், ஸார். அவர் அப்படி 'ரீல்'விட்டாரே. அதற்கு என்ன அத்தாட்சி?'' என்று நண்பர், கானடாவிலிருந்து டிஸம்பர் ஸீஸனுக்கு வந்து வராந்தா விமரிசனத்தைக் கேட்டுச் சொல்லியவரைக் கேட்டார்.

''ஸங்கீதக்காரர்களைப் பற்றியோ, கடந்த கால நிகழ்ச்சிகளைப் பற்றியோ பேசறவாளுக்கு ஒருவித அத்தாட்சியும் வேண்டாம். அரியக்குடி ராமாநுஜ ஐயங்காரை 'ராமானுஜம்' என்றோ, செம்மங்குடியாரை 'சீனு' என்றோ கூப்பிடும் யோக்கியதை ஒன்றே போதும்'' என்று வராந்தா ரஸிகர் நண்பருக்கு விளக்கினார்.

''ஸார்! நிச்சயமாக ஹாலுக்குள் உட்கார்ந்து கொண்டு இந்த மாதிரி ரஸமான

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

கபீர் பேடி ! இவர் சில ஆண்டுகளுக்குமுன் இந்திப் படங்களில் நடித்தவர். மார்க்கெட் சரியில்லாததால் ஹாலிவுட் போய்விட்டார். இவர் இப்போது ஹாலிவுட்டில் இருந்து கொண்டு ஒரு நல்ல காரியத்தில் ஈடுபட்டிருக்கிறார் !

இந்திராகாந்தி சுடப்பட்டதால் ஏற்பட்ட இனக் கலவரத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு இவர் நிதி திரட்டி வருகிறார்! அதிலும் தனி பாணியைப் பின்பற்றுகிறார் ! இதில் வருவாரும் இந்துக்களின் நன்கொடை பாதிக்கப்பட்ட சீக்கியர்களுக்கும் சீக்கியர்கள் தரும் நன்கொடை இந்துக்களுக்கும் பயன்படுத்தப்படும். வேறு இனத்தவரின் நன்கொடை இருவருக்கும் பகிர்ந்தளிக்கப்படுமாம் !

சம்பத் குமாரி
ஆதாரம்: 'தி வீக்'



சங்கீதத் துணுக்குகளைக் கேட்காமல் போய் விட்டேனே என்று இப்ப தோன்றது ஸார் !''

'' ஆமாம். தாசரதேயை அரியக்குடி டேப்பிலோ, ரேடியோவிலோ கேட்டுவிட லாம். கும்பகோணம் நண்பர் பேச்சைக் கேட்க முடியுமா ?'' என்றார் கேலியாக.

'' நீங்க என்ன, அகாடமிக்கு மட்டும்தான் வருகிறீர்களா ?''

'' எல்லா ஸபாக்களுக்கும் போகிறேனே. அன்றைக்கு ராத்திரி கிருஷ்ணகான ஸபா வுக்குப் போயிருந்தேன். அன்று ராத்திரி அங்கு நடன விருந்து !''

'' அதிலே ஏதாவது 'தாசரதே' போல ரஸமான விஷயம்...'' என்று நண்பர் ஆவ லுடன்கேட்டார். இந்த விஷயத்தில் அவருக்கு ஆசை அதிகமாய்விட்டிருந்தது.

''அங்கே ஒருத்தன் சொன்னான்: 'அம்மாக் களின் முகத்திலே இருக்கிற அபிநயபாவங்கள் நடையில் தாளக்கட்டு ஆடற பெண்களிடம் காணுமே''என்று! சபாவைச் சேர்ந்தவரிடம் நடனமணியின் தாயார் கேட்டார். 'ஏன் ஸார், பத்திரிகை விமர்சகர் வந்துவிட்டாரா? யார் ஸார் ? அவரைக் கொஞ்சம் அறிமுகப் படுத்துங்களேன்...'

'' அதோ அவர்தான்'' என்று காட்டி விட்டுச் சபாவைச் சேர்ந்தவர் நழுவினார். தாயார் அப்படியே குழைந்து, '' வாருங்கள், ஸார்....'' என்று கைப் பையிலிருந்து ஒரு போட்டோவைக்கொடுத்து, '' நீங்க முன்னே வந்து உட்காருங்கள்'' என்று விநயமாய்க் கேட்டுக் கொண்டு உடம்பை இரண்டாய் மடித்து விமர்சகரை அழைத்துக் கொண்டு போனார்.

மேடையில் நர்த்தனம் ஆடுபவர், ''வருகலாமோ, ஐயா'' என்ற நந்தன் பாட் டுக்கு ஆடிக்கொண்டிருந்தார். தாயார் பத்தி ரிகைவிமர்சகரிடம்குழைந்துகேட்டுக்கொண்ட முகபாவம், இள்ளைம்பலத்தானைக் கேட்பதை அபிநயம் பிடித்த பெண் முகத்தில் இல்லை!'' என்றார்.

'' ஒண்ணு பார்த்தீர்களா ஸார்'' என்று அவர் மேலும் துவக்கினார். ''சீசனிலே ஒரு டான்'ஸ் கச்சேரிக்குப் போனால் இந்த இந்தியா விலே டில்லி, கல்கத்தா, பம்பாய் எல்லா நகரங்களிலும் எந்தெந்த பெண்கள் ஆடு கிறார்கள், அவர்கள் அம்மாக்கள் யார் என்று சொல்லாமலே தெரிந்து கொண்டுவிடலாம். 'தோடய மங்களம்'னு நட்டுவனார் தட்டின வுடனே ஹாலில் மற்றப் பரத நாட்டிய மணிகள், 'பியூட்டி குவீன்' போட்டியில் நடப்பவர்களைப் போல் ஹாலினுள் தாய் மார்கள் தொடர வருவார்கள். அலாரிப்பு ஆரம்பிக்கும்போது ஹாலைவிட்டுப் போய்விடு வார்கள். எல்லா நடன கொமணிகளையும் ஒரே இடத்தில் பார்க்கும் வாய்ப்பு இந்த சீசனிலேதான் கிடைத்தது.''

'' ஆமாம், உங்களுக்குப் பாட்டைப் போலவே நாட்டியத்திலும் ரொம்ப ஆர்வம் உண்டு போலிருக்கு'' என்றார் நண்பர்.

'' அதுதான் சொல்லிவிட்டேனே ஸார், டிஸம்பர் ஸங்கீத விழாவில் வராந்தா பாட்டு, சீசனில் ஆடும் பெண்களின் தாயார்கள் அபி நயம் இதற்கு ஈடு வேறெதுவும் இல்லை, ஸார் !'' என்றார்.

'' ஸார். நீங்கள் நிச்சயமாகவே பரம ரஸிகர்தான்'' என்று அவருக்கு மேலும் 'ஷொட்டு' கொடுத்துவிட்டு, அடுத்த வரு டம் நான்கூட உங்களைக்கடைப்பிடிக்கலாம்னு இருக்கேன் '' என்று நண்பர் சொல்லிக் கொண்டேயிருந்தார். அப்போது வராந்தா ரஸிகர் மனைவி அகாடமி ஹாலினுள்ளிருந்து கதவைத் திறந்து கொண்டு வந்தாள்.... ''ஆமாம், பாட்டு கேட்க வரேன்னு வெளியி லேயே இருந்துவிட்டீர்களே. பாகவதர் 'தாசரதே'என்னஅபாரமாய்ப்பாடினார் தெரி யுமா? உங்களுக்கு ரொம்பப் பிடித்த பாட்டு. அடிக்கடி அரியக்குடி ராமானுஜ ஐயங்காரின் டேப்பை, கானடாவில் ரம்யா வீட்டில் போட்டுக் கேட்பீங்களே'' என்று கணவன் கேட்காததை நினைத்து அங்கலாய்த்தாள்.

கும்பகோணம் வீட்டில், 'ராமானுஜம்! தாசரதே கேட்கணும்னு இருக்கு' என்று சொல்லி அரியக்குடி பிரத்தியேகமாய்ப் பாடின அந்தத் 'தாசரதே' மாதிரி இருக் கிருக்க முடியுமா ? சொல்லுங்கள்!

---

கைக்குட்டைகள் தொடக்கக் காலத் தில் வட்ட வடிவமாகத்தான் இருந் தன. பிறகு எப்படி சதுரமாக மாறின?

பிரான்சு நாட்டை 16—ம் லூயி மன் னர் ஆண்டு வந்தார். அவர் மனைவி மேரி ஒரு நாள் ரோஜாப் பூவைப் பறித்தபோது கையில் முள் குத்தி ரத்தம் வந்துவிட்டது. உடனே ஒரு வேலைக்காரி கைக்குட்டையினால் காயத் தில் கட்டுப் போட்டாள். கைக்குட்டை வட்டவடிவமாக இருந்ததால் கட்டுப் போட முடியவில்லை. அன்றே மேரி அர சரைச்சந்தித்து ''இனி கைக் குட்டை களை சதுரமாகத்தான் தயாரிக்கவேண் டும்'' என்று சட்டமியிடும்படி கேட்டுக் கொண்டாள் !

—பொ. க. சேஷாத்திரி





# சிக்கித் தவித்த சிங்கவால் குரங்கு

சில காலம் முன் மனத்தை வருத்திய ஒரு நிகழ்ச்சியை மாணவர் பக்கம் மூலமாக வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற உந்துதலினால் இதை எழுதுகிறேன்.

விக்கிரமசிங்கபுரம் என்ற எங்கள் ஊரின் அருகே உள்ள முண்டந்துரை சரணாலயத்திற்கு உட்பட்ட காட்டு பகுதிகளிலிருந்து இரண்டுசிங்கவால்குரங்குகள்என்றுஅழைக்கப்படும் மந்திகள் தப்பி ஊருக்குள் வந்து விட்டன.

இந்த அரிய சிங்கவால் குரங்குகளின் எண்ணிக்கை தற்சமயம் மிகக் குறைவாகவே உள்ளது. இவற்றைப் பாதுகாக்கப் பல நடவடிக்கைகள் வனத் துறையினால் எடுக்கப்பட்டு வருவதாகவும் கூறுகின்றனர். ஆனால் இந்த இரு குரங்குகளும் பட்டபாடு வார்த்தையில் அடங்காது. இக்குரங்குகள் காட்டிலிருந்து தப்பி வந்ததைப் பற்றித் தகவல் கொடுத்த பிறகு வனத் துறையினர் நடவடிக்கை ஏதும் எடுக்காதிருந்தது பரிதாபம்.

பெரியவர்களால் விரட்டப்பட்டும், சிறுவர்களால் கல்லால் அடிபட்டுத் துன்புறுத்தப்பட்டும் காட்டிலிருந்து தப்பி வந்ததன் பலனை உணர்ந்தன. இவ்விரு குரங்குகளில் ஒன்று எங்கள் வீட்டில் உள்ள மாமரத்தில் அடைக்கலம் புகுந்தது. மற்றொன்றைச் சிறுவர்கள், 'உன்னை இன்று கொல்லாமல் விட மாட்டோம்' என்று கங்கணம் கட்டிக்கொண்டு கல்லை எறிந்து துரத்திச் சென்றனர். அதிர்ஷ்டவசமாக எங்களிடம் அடைக்கலமாக வந்த விருந்தாளிக்கு இந்தத் துன்புறுத்தல் இல்லை. மாங்கனிகளைக் கடித்துத் தின்பதை வேடிக்கைப் பார்த்ததுடன், அதற்குச் சாப்பாடும் கொடுத்தோம்.

என் தந்தை செங்கோட்டையிலுள்ள வனவிலங்கு சரணாலய அதிகாரிக்கு இரவில் ஒரு தந்தி கொடுத்தார். இது போதாது. இக்குரங்குகளை உடனே காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தில் அம்பாசமுத்திரம் பாரஸ்ட் ரேஞ்சில் நேரடியாகச் சென்றும் கூறினார். இதற்கு அங்கிருந்த ஊழியரின் பதில் என்ன தெரியுமா? ''ஸார், நான் நாளை ஊருக்குப் போகின்றேன். நீங்கள் என்னிடம் வந்து தகவல் கொடுத்ததாகக் கூறி விடாதீர்கள். என் வேலை போய்விடும்'' என்பதுதான்!

முந்தைய நாள் மத்தியானம் இரண்டு மணி அளவில் வந்த குரங்கு மறுநாளும் மரத்திலேயே இருந்தது. என் தந்தை மறுமுறையும் அம்பாசமுத்திரம் காட்டிலாகாவுக்குச் சென்று ஒரு மனு எழுதிக் கொடுத்து, ''குரங்கைக் காப்பாற்றுங்கள்'' என்று கூறி விட்டு வந்தார். இப்போதாவது வந்தார்களா, என்றால் இல்லை!

முடிவில் மாமரத்தை அடைக்கலம் புகுந்த குரங்கு ஓடிவிட்டது. எங்கு சென்றதோ? அதன்பின் நாங்கள் கேள்விப்பட்டது சுட்டுக் கொன்றுவிட்டார்கள் என்று. எங்கள் வீட்டு மாமரத்தில் இருக்கும்போதே அதைச் சுட ஆள் வந்தது. அதற்கு இன்னும் ஒரு நாள் ஆயுசு இருந்ததாலோ என்னவோ, அன்று பிழைத்தது. ஆனால் விதி அதை விடவில்லை. மறு நாள் கொல்லப்பட்டுவிட்டது. மற்றொரு குரங்கு என்னவானது என்பது கேள்விக்குறி.

பொதுமக்களாகிய எங்களுக்கு இருக்கும் பொறுப்புணர்ச்சி, இரக்க குணம்கூட இதற்காகவே நியமிக்கப்பட்டு, மக்களின் வரிப்பணத்தில் சம்பளம் வாங்கும் அதிகாரிகளிடம் இராது போலும்! நாங்கள் ஏதோ தலை போகிற காரியம் என்று தந்தியும், தகவலும் கொடுக்க இவர்கள் இதெல்லாம் ஒரு தூசு, இதற்குப் போய் அலட்டிக் கொள்வதா என்று இருந்தால், வனவிலங்கு சரணாலயம் என்பது எதற்கு?

—தேனமிர்த சியாமளா, எம்.ஏ., மதுரை
சட்டக்கல்லூரி, IBGL, மதுரை

# ஹாங்காங்கில் சிக்கல்



சில மாதங்களாகப் பத்திரிகைகளில் அதிகமாக அடிபடும் இடங்களில் ஹாங்காங்கும் ஒன்று. அங்கு வாழும் மக்கள் தங்கள் எதிர்காலம் எப்படி இருக்கும் என்றே தெரியாத நிலையில் இருக்கின்றனர். ஹாங்காங் டாலரின் மதிப்பு நாளுக்கு நாள் குறைந்துவருகிறது. தொழில் முதலீடு செய்துள்ள பல வெளிநாட்டவரும், வணிகர்களும் அங்கிருந்து வெளியேறுகின்றனர். ஹாங்காங்கில் வாழும் பிரிட்டிஷ் மக்கள் பிரசவத்துக்காக லண்டன் சென்று குழந்தை பெற்றுத் திரும்புகிறார்கள், தங்கள் குழந்தைகள் பிரிட்டிஷ் குடியுரிமை பெறுவதற்காக. இவற்றுக்கெல்லாம் காரணம், இப்போது அங்கு இருக்கும் பிரிட்டிஷ் ஆட்சி ஜூலை 30, 1997ல் முடிவுற்று, பிறகு அங்கு கம்யூனிஸ்டு சீனாவின் ஆட்சி ஏற்படும் என்ற அச்சமேயாகும்.

சீனாவிற்குத் தெற்கே, தென் சீனக் கடலில் அமைந்துள்ள சிறிய தீவு, ஹாங்காங். 1840ல் சீன நகரமான கேண்டனிலிருந்து வெளியேறிய பிரிட்டிஷ் படைகள், ஹாங்காங்கை வந்தடைந்தன. இதன் அழகிய கடற்கரையினால் கவரப்பட்ட முதல் ஹாங்காங் கவர்னர் ஹென்றி பாட்டிங்கர், 'எதிர்காலத்தில் ஹாங்காங் மிகப் பிரம்மாண்டமான வர்த்தக ஸ்தலமாக மாறும்' என்று கூறினார். அவர் கூறியது போலவே, 150 ஆண்டுகளுக்குப் பிறகு, ஹாங்காங் இன்று உலகிலேயே மூன்றாவது மிகப் பெரிய வியாபார நகரமாகவும், முக்கிய துறைமுகமாகவும் வளர்ந்துள்ளது.

பிரிட்டன் ஹாங்காங்கைக் கைப்பற்றியவுடன், சீனாவுடன் மூன்று ஒப்பந்தங்களில் கையெழுத்திட்டது. 1898ம் ஆண்டு ஏற்பட்ட உடன்படிக்கையின்படி, 99 ஆண்டுகளுக்கு, அதாவது 1997 வரை ஹாங்காங் பிரிட்டிஷ் ஆட்சியிலிருக்கும்.

சமீப காலம் வரை, ஹாங்காங் மக்கள், 1997 என்பது மிகத் தொலைவில் இருக்கிறது என்று நினைத்து வந்தார்கள். ஆனால் 1982ல் திருமதி தாட்சர் சீனாவிற்கும், ஹாங்காங்குக்கும் சென்று இதைப் பற்றிப் பேசியவுடன் தான் மக்கள் அதைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியிருக்கிறார்கள்.

இப்பிரச்னை குறித்து இரு நாடுகளும் இதுவரை 18 முறை பேச்சு வார்த்தை நடத்தியுள்ளன. சீனா, ஹாங்காங் தனக்கே உரியது என்று கூறுகிறது. சீனாவின் ஆட்சி தவிர்க்க முடியாதது என்றாலும், ஹாங்காங் மக்களும், வணிகர்களும், தொழிலதிபர்களும் தற்போது அனுபவித்து வரும் உரிமைகளையும், வியாபார, வரிச் சலுகைகளையும், நீடிக்கச் செய்ய வேண்டும் என்பது பிரிட்டனின்' விருப்பமாகும்.

ஹாங்காங்கை இழப்பதால் பிரிட்டனுக்குப் பொருளாதார ரீதியில் பெரிய இழப்பு இருக்காது என்று கருதப்படுகிறது. மாறாக, சீனா ஒரு சிறந்த வியாபார ஸ்தலத்தை இழப்பதுடன், ஹாங்காங்கின் மூலம் கிடைக்கும் 35 சத அந்நியச் செலாவணி வருமானத்தை இழக்கும் என்று கூறப்படுகிறது. ஹாங்காங் மக்களுக்கும், வணிகர்களுக்கும் சகல உரிமைகளும், சலுகைகளும் அளிக்கப்படும் என்று சீனா பல முறை கூறும்போதிலும், மக்கள் அதை நம்பத் தயாராக இல்லை.



இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு நமது பாரத அரசு, அந்தமான் தீவையோ அல்லது அதன் தலைநகர் போர்ட் பிளேரையோ, ஹாங்காங்கிற்கு இணையான வரிச் சலுகைகள் உள்ள தொழில் ஸ்தலமாக மாற்றி, ஹாங்காங்கிலிருந்து வெளியேறும் தொழிலதிபர்கள் அங்கு தொழில் தொடங்க உதவினால் அந்தமான் மிகப்பெரிய வியாபார ஸ்தலமாக மாறுவதோடு, இந்தியாவின் அந்நியச் செலாவணியும் பெருகும். மத்திய அரசு சிந்திக்குமா ?

—என். பாலாஜி, பி.எஸ்.ஸி. (வேதியியல்)
மூன்றாம் ஆண்டு, புகளுர், திருச்சி

**மாணவர் பக்கம்**

**வ**ழக்கமாக ஒவ்வொரு திங்களன்று காலை தோன்றும் சோம்பேறித்தனம் இன்று விடிந்ததிலிருந்து மனத்தையும் உடலையும் உடும்பாய்ப்பிடித்துக் கொண்டிருந்தது.

நேற்று விடுமுறை!.. நாளை இரண்டாவது சனிக்கிழமை விடுமுறை... அடுத்தது ஞாயிறு இப்படியிருக்க இன்று சோம்பேறித்தனம் எப்படி வராமல் இருக்க முடியும்?

அதோடு இன்னொன்று...

எங்கோ வேதாரண்யத்தில் நாளை மாலை புயல் அடிக்க வாய்ப்பென்று கூறினதாலோ என்னவோ இன்றுகாலையில் விடிந்ததிலிருந்தே மேக மூட்டம்... தூறல்.. உடம்ப்ல் அதிகப்படியான சோம்பேறித்தனம்...

வேறெதில் சாமர்த்தியம் இருக்கிறதோ இல்லையோ என் மனைவிக்கு எனது 'லீவு போடும் மன நிலையை' துல்லியமாகக் கண்டுபிடிப்பதில் 'இல்லாடித்தனம்' அதிகம்...

''மணியாகறதே... நீங்க இன்னும் ஏன் குளிக்கப் போகலை...''—ஆரம்பித்தான்...

''தோபாரு...சும்மா தொணதொணக்காம இரு... எனக்கு இன்னிக்கு உடம்பு முடியலை...''

'' என்ன வேணு செஞ்சுக்கங்க.. நான் இன்னும் அரை மணிலே எங்க அக்கா வீட்டுக்குப் போயாகணும்... சாயங்காலம் நாலு மணிக்குத்தான் வருவேன்.. காபி.. டிபன் எல்லாம் வச்சப்புறந்தான்..'' பொரிந்து தள்ளி விட்டு உள்ளே போய் விட்டாள்...

''லீவு போடறதுன்றதுதான் முடிவா யிடுத்து... உள்ளே வந்து குளிச்சு சாப்பிட்டா என் வேலை முடிஞ்சுடும்... வானம் ஏகமா மூட்டமா வரது.. காற்றும் இருக்கு.. நான் மழைக்கு முன்னாலே போயிட்டு வந்துடறேன்' என்று கல்யாணி குரல் கொடுக்க உள்ளே போனேன்.

பசங்கள் இரண்டும் பள்ளிக்குக் கிளம்பி விட்டிருந்தன.

கல்யாணி விவித பாரதியைத் திருப்ப 'ராத்திரியில் பூத்திருக்கும்' பாட்டு கிளம்ப,



இப்பாட்டை ரெக்கார்ட் செய்ய வேண்டும். என்று நான் நினைத்தது நினைவுக்கு வந்ததும்

''கல்யாணி...ராமன்கிட்டே 'ஹெட்'டை மாற்ற டேப் ரிகார்டரைக் கொடுத்திருந் தேன்னே... மாற்றிக் கொண்டு வந்து கொடுத் தான்... என் டிராயரிலேயே வைத்து மறந்து விட்டேன்... திருட்டுப் போயிடுத்துன்னா...? என்ன பண்றதுன்னே புரியலையே!''

''சீக்கிரமா ஆபீஸ் கிளம்புங்கோ... உங்க பிரெண்ட் மாதவன் வழக்கமா சீக்கிரமா ஆபீஸுக்கு வந்திடுவார்னு சொன்னீங்களே... உடனே அவருக்கு போன் செய்யுங்களேன்...''

''அடேடே... அருமையான யோசனை... கல்யாணின்னா கல்யாணிதான்...''

சில்லறைக்கு அலைந்து உடனடி தேவை இல்லாமல் 'பிஸ்கெட்' பாக்கெட் வாங்கி இரண்டு ஐம்பது பைசா நாணயம் சமா ளித்தேன்...

வழக்கப்படி முதல் நாணயத்தைக் கப்பம் கட்டுவது போல் அழுது இரண்டாவது நாணயத்தில் நம்பரைப் பிடித்தேன்...

மாதவன் வந்து கான்டீன் போயிருந் தார்..

விஷயத்தை மற்றவர்களிடம் சொல்லப் பயந்து அவரை அழைத்து வரச் சொன் னேன்...

வந்தார்...

விஷயத்தைச் சொன்னதும் காத்திருக்கச் சொல்லிப் போனார்..

சஸ்பென்ஸ்... சஸ்பென்ஸ்...

''ரமணி... பெட்டி பத்திரமா இருக்கு... நான் எடுத்து வைச்சிக்கறேன்'' என்றார்... உயிர் வந்தது.. அவரே 'தொடர்ந்தார்...

''இன்னிக்கின்னு லீவு போட்டுட்டயே... போன மாசம் ஒரு புயல் வந்ததே அதுக் குன்னு நாம்ப 'லோன்' கேட்டுருந்தமே... வந்திருக்கு... இன்னிக்குள்ளே அப்ளை பண் ணணுமாம். அப்பத்தான் அடுத்த வாரம் கெடைக்கும். இல்லேன்னா அடுத்த பாட்ச் சாங்ஷன் ஆகறதுக்கு ஒரு மாசம் ஆகுமாம்''

எனக்குள் எரிச்சல்... ஒரு நாள் ஹாய் யாக லீவு போட வேண்டும் என்று நான் முடிவு செய்தவேளையில் தான் எல்லா 'சனி யன்'களும் நிகழும்..

பணம் உடனடியாகத் தேவைப்பட்டது...

''பேசாம உடனடியா கிளம்பி ஆபீ ஸுக்கு வந்துடேன்... பத்தரை மணிக் குள்ளே வந்துடலாமே... பெர்மிஷன் சொல் லிடறேன்.'' மாதவன் போனில் தொடர்ந் தார்....

''இல்லே மாதவன்... நான் இன்னும் குளிக்கலே... சாப்பிடலே.. லேட் ஆயிடும் பதினொண்ணு பதினொண்ணரை மணிக்கா அங்கே வரேன்... ஆபீஸ் வாசல்ல இருக்கிற 'ஆவின்' மில்க் பார் வாசல்ல ஒரு அப்ளி கேஷனோட வந்து உதவி பண்ணுங்க... கையெழுத்துப் போட்டுக் கொடுத்துடறேன். அப்படியே டேப் ரிகார்டரையும் எடுத்துண்டு வந்துடுங்க...'' என்று சொல்லி போனை வைத்தேன்...

பத்தரை மணி பஸ்ஸைப் பிடித்தால் குற ளகம் வாசலில் பதினொண்ணேகாலுக்குப் போகலாம்...காரியத்தை முடித்துக்கொண்டு பன்னெண்டரை மணிக்குத் திரும்பிட முடி யும்..

மனைவியிடம் " ஆபீஸுக்குப் போகும் விஷயத்தைக் கூறவில்லை.

ஒரு வழியாக 'ஆவின்' பூத்தை அடைந்த போது மணி பன்னிரண்டு.. நல்ல மழை... பலமான காற்று... உடல் முழுதும் தெப் பமாக நனைந்திருந்தது...

மாதவன் காத்திருந்தார்..

''என்ன இன்னிக்கு லீவு போட்டுட்டே. லீவையும் போட்டு ஆபீஸுக்கும் வரும்படி ஆயிடுத்தே...'' எரிச்சலூட்டும்படி கேள்வி கேட்டார்..

''ஹு.. ஹி.. கொஞ்சம் வேலை இருந்தது. உடம்பும் சரியில்லே...'' ஏதோ உளறிக் கொட்டினேன்.

ஈரம், குளிருட்ட உடல் நடுங்கியது...

டேப் ரிகார்டரை மாதவன் கொடுத் தார்.. 'லோன்' அப்ளிகேஷனைக் கொடுத் ததும் அவர் போய் விட்டார்...

உடனடியாகக்கிளம்பலாமென்றால்வலுக்க மழை.. குடையைப் பிரித்து எடுத்துச்செல்ல முடியாத காற்று...

மழை நிற்பதாகக் காணோம்...

'இது என்ன சோதனை'.. வேதனை பிடுங் கியது..

இரண்டு மணி சுமாருக்கு மழை சற்றுக் குறைய ஆரம்பித்தது... உடன் கிளம்பிப் பஸ் பிடித்தால் எப்படியும் மூனு மணிக்குள் வீடு போய் விடலாம்.. லீவு போட்டதற்கு குறைந்த பட்சம் இரண்டு மணி நேரமாவது வீட்டிலிருந்த திருப்தி ஏற்படும் என்று மனத் தினுள் நிராசைக் கணக்கு..

திடீரென மறுபடியும் மாதவன் வந்தார் கையில் பை; குடை சகிதமாக...

''என்ன ரமணி நீ இன்னும் வீட்டுக்குப் போகலயா? நல்லா லீவு போட்டே போ...'' என்று கூறி சலாட்டாவாக நகைத்தார்.

''என்ன செய்யறது மாதவன்... மழை விட்டபாடு இல்லையே..'' என்றேன் ஆதங் கத்துடன்...

''என்ன பையெல்லாம் எடுத்துண்டு வந் திருக்கீங்க..'' நானே தொடர்ந்தேன்...

''சாயங்காலம் அஞ்சு மணிக்குச் சென் னையைப் புயல் கடக்கறதுக்கு வாய்ப்பு இருக் குன்னு ரேடியோவிலே சொல்லிட்டானே. தெரியாதா ...? அதனாலே எல்லோரும் சீக் கிரமா வீட்டுக்குப் போகணும்னு கேட்டோம். ரெண்டு மணியோட ஆபீஸை 'க்ளோஸ்' பண்ணி பர்மிஷன் கொடுத்துட்டார் மேனே ஜர்...''

எனக்குள் எரிச்சல்... எரிச்சல்...

''லீவையும்விட்டுட்டு ஆபீஸுக்கும் வந்து, அரை நாள் பெர்மிஷனையும் மிஸ் பண் ணிட்டு மழையிலும் நனைந்து... லீவு போட றதுக்கு நல்ல நாளைத் தேர்தெடுத்தேப்பா நீ..'' சுற்றுப்புறத்தில் பத்து பேர் கேட்கும் படி கூறி மாதவன் உரக்கச் சிரித்தார்...

வெளியில் காற்று மறுபடியும் வலுத்தது..

மனைவி செய்யப்போகும் கேலி மனக்கண் ணில் தோன்ற ஏமாற்றமும் அவமானமும் ஒன்றிணைந்து சூறாவளியாய் உள்ளத்தை ஆட் டத் தொடங்கிற்று.



சந்த் பரமானந்த் பிளைண்ட ரிலீ:ப் மிஷன் வழங்கும்

ஒரே குலுக்கலில் நூறு லட்சாதிபதிகள் உருவாக
மற்றொரு வாய்ப்பு !

# நேத்ர கல்யாண்
## சூப்பர் பம்பர்

டிக்கட்
விலை ரூ.2
மட்டுமே

100 முதல் பரிசுகள் ரூ. 2 லட்சம் வீதம்

100 இரண்டாவது பரிசுகள் ரூ. 50 ஆயிரம் வீதம்

500 மூன்றாவது பரிசுகள் ரூ. 10 ஆயிரம் வீதம்

5,000 4வது பரிசுகள் ரூ. 1000/- வீதம்

50,000 5வது பரிசுகள் ரூ. 100/- வீதம்

மொத்தப் பரிசுத் தொகை ரூ. 4.50 கோடி

மொத்த பரிசுகள் : 5,55,700






குலுக்கல்
தேதி :
15.2.85

ஆர்கனைஸிங் ஏஜெண்ட்
ஸ்வஸ்திக் லாட்டரி
ஏஜென்ஸிஸ்
புது தில்லி-110 001

# நீங்கள் கேட்டவை

தராசு





○ பொறுமைக்குப் பரிசு



✕ இவரிடம் கற்றவை



○ மர்ம மன்னன்



○ ஜென்டில்மேன்

○ எம். சம்பத், வேலாயுதம் பாளையம்.

? லட்சியம் லட்சம் - இன்றைய அரசியல்வாதிகளிடம் எதற்கு மதிப்பு அதிகம் ?

! லட்சமே லட்சியமாக இருந்த காலம் மலை ஏறி இப்போது கோடியே லட்சியமாக இருக்கிறது.

○ பத்மினி சுரேஷ், கோவை-9.

? இனி ஜெயலலிதாவின் செல்வாக்கு எப்படி இருக்கும் ?

! எம்.ஜி. ஆரின் உடல் ஆரோக்கியத்தைப் பொறுத்து இருக்கும்.

○ நா. அப்துல் கரீம், கோக்ரிஜார், அஸ்ஸாம்.

? நல்லது கெட்டதை உணரக்கூடிய வயது ?

! எல்லா வயதும்தான். சில சமயங்களில் சில மனிதர்கள் நல்லது கெட்டதைப்பகுத்தறிய முடியாதவர்களாக நடிப்பார்கள். வேறு சில சமயம் கெட்டதை நல்லதாக எண்ணிச் செய்வதுபோல் பாவனை புரிவார்கள். எல்லாம் சுயநலம்தானே தவிர நல்லது கெட்டதை உணர முடியாததால் அல்ல.

○ அம்பிகா, சென்னை.

? எழுத்தாளர் லக்ஷ்மிக்குப் பரிசு கிடைத்திருப்பது பற்றி.....?

! இந்த சாகித்திய அகாதமி பரிசு அவரது நாவலுக்குத் தரப்பட்ட பரிசு மட்டுமல்ல; அவரது பொறுமைக்கும் சேர்த்துத் தரப்பட்ட வெகுமதி.

○ பா. கிருஷ்ணதாஸ், கும்பகோணம்.

? வகுப்பில் தூங்கிய மாணவன், தேர்தலில் தூங்கிய வாக்காளன் - ஒப்பிடுக.

! முன்னவனை எழுப்பலாம் பின்னவனை எழுப்ப முடியாது என்பது ஒருபுறமிருக்க, மாணவன் இழந்ததைத் திரும்பப் பெற வாய்ப்புண்டு. தேர்தலில் தூங்கிய வாக்காளன் அடையும் நஷ்டத்தை ஈடு செய்யவே முடியாது.

○ வெ. நிலா, மன்னை.

? கல்கி சதாசிவத்திடம் நீங்கள் கற்றுக் கொண்டது என்ன ?

! (1) பொறுப்புக்களைத் தக்கவரிடம் ஒப்படைத்துத் தட்டிக் கேட்டு வேலை வாங்கும் நிர்வாக ஆற்றல் (2) எதிலும் ரசிகத் தன்மை (3) குற்றங்களை தவறுகளை வன்மையாகக் கண்டித்தல்; ஆனால் விரோதம் பாராட்டாமை. (4) தலைவரிடம் அசைக்க முடியாத பக்தி (5) சாதுர்யப் பேச்சு (6) நகைச்சுவை உணர்வு (7) ஒரு லட்சியத்தை நிர்ணயித்துக் கொண்டுவிட்டால் மலையைப் புரட்டியாவது அதைச் சாதிக்கப் பாடுபடும் விடாமுயற்சி (8) உண்டி சுருக்கியும், நிறைய நடந்தும் உடல் ஆரோக்கியம் பேணல் (9) வாரி வழங்கும் ஈகைக் குணம் —என்றிப்படி பலவற்றைக் கற்றுக்கொண்டேன். கடைப்பிடிக்கிறேனா என்பது வேறு விஷயம் !

○ ராகவன், திருவாரூர்.

? மறுபடி ஒரு ரயில் விபத்து... ?

! நிர்வாக யந்திரத்தைத் துடைத்துச் செப்பனிட்டு எண்ணெய் போட்டுப் பொறுப்புணர்வோடு சீராக இயங்கச் செய்வேன் என்று பிரதமர் சொல்லி வாய் மூடுவதற்குள் நிகழ்ந்துவிட்ட விபத்து ! நல்ல வேளையாக அதிக உயிர்ச் சேதம் இல்லை. பொதுவாகவே ரயில் விபத்துக்கள் கொடுமை என்றால் அந்த விபத்தில் தப்பிப் பிழைத்த பயணிகள் படும் அவதி அதைவிடப் பெருங் கொடுமை. எங்கோ தண்ணீரில்லாக் காட்டில் விபத்து நடந்துவிட்டிருக்கும். அவர்களுக்கு உணவு, குடி நீர், மருத்துவ உதவி உடனே கிடைக்கச் செய்வதோடு அவர்கள் போகவேண்டிய இடத்துக்குச் சிரமமின்றிப் போய்ச் சேர உடனடி நடவடிக்கை எடுக்க வேண்டும். ரயில்வே

இல்லாகா இதில் தவறிவிடுவதானது விபத்தை நடக்க அனுமதித்ததைவிடவும் பெரிய பொறுப்பற்ற செயல்.

○ ஆர். சிவசுப்பிரமணியன், வெளிவை. ★

? மர்மப் படங்கள் அதிக அளவில் வராதது ஏன்?

! அதானே. பெரிய மர்மமாயிருக்கிறதே என்று யோசித்துப் பார்த்ததில் தோன்றியவை : ஒரு மர்ம நாவலில் பல திடுக்கிடச் செய்யும் நிகழ்ச்சிகளைக் கூறிவிட்டு நாயகன் மவுண்ட் ரஷ்மோர் மலை உச்சியில் நாலு விரல்கள் விளிம்பைப் பற்றியிருக்க கீழே அதளபாதாளம் வாயைப் பிளந்திருக்கத் தொங்குவான். வில்லன் அந்த விரல்களை மிதிப்பான்! இதிலே பிரமாதமான அம்சம் என்னவெனில் அந்த மலைச் சரிவில் அமெரிக்க ஜனாதிபதிகள் பலரது முகங்கள் பிரும்மாண்ட அளவில் செதுக்கப்பட்டிருக்கும். வாஷிங்டன், லிங்கன், ஜெபர்ஸன் போன்ற

# அடுத்த தேர்தலில் சிலுக்கு ?

உன்னதத் தலைவர்கள் உருவாக்கிய அமெரிக்காவில் இந்த அநீதி நடக்கிறது என்பதைச் சொல்லாமல் சொல்லி அமெரிக்க சமுதாயத்தை இடித்துரைத்த புதுக் கவிதை அது. இப்படியெல்லாம் யோசித்துத் தமிழில் படம் எடுக்க முடியாதா என்ன? பேஷாக முடியும். அதற்கு முன் வராததும் சரியான கதையைத் தேர்ந்தெடுக்காததும்தான் குறை.



○ அடுத்த தேர்தலில் ○ நாளைய செல்வாக்கு

அவை நிகழக் காரணமாயிருப்பவர் யார் என்பதை ஸஸ்பென்ஸாக வைத்திருந்து கடைசியில் இவர்தான் அந்தக் குற்றவாளி என்று துப்பு துலக்கலாம். இந்தப் பாணியில் — துப்பறிபவர் கோணத்தில்— படம் எடுத்தால் 'சப்'. பிறகு? சினிமாவில் திடுக்கிடச் செய்யும் சம்பவங்களும் வேண்டும். அதற்குக் காரணமானவரையும் காட்ட வேண்டும். ஐயோ! இந்த முரடனிடம் அயோக்கியனிடம் அல்லது கொலை பாதகனிடம் இந்த ஒன்றுமறியா அப்பாவிகள் மாட்டிக் கொண்டு சாகக் கூடாதே என்ற பரிதாப உணர்வுடன் கூடிய பீதி படம் பார்ப்பவர்கள் மனதில் உருவாக வேண்டும். இவ்வாறு வில்லன் கோணத்திலிருந்து படம் எடுப்பதுடன் சினிமாவுக்கென்றே ஏற்ற பாணியில் சில சஸ்பென்ஸ் காட்சிகள் அமைய வேண்டும். உதாரணமாகத் தொடர்கதைகளை ஸஸ்பென்ஸில் முடிப்பதை **Cliff hang'ng suspense** என்று உருவகமாக ஆங்கிலத்தில் சொல்வார்கள். இந்த உருவகத்தை நிஜமாக்கத் தீர்மானித்தார் ஹிட்ச்காக் ஒரு படத்தில். கதா

○ லலிதா, சேலம்.

? ஒரே சமயத்தில் இரண்டு மூன்று பத்திரிகைகளில் தொடர்கதைகளை ஆரம்பிக்கும் எழுத்தாளர்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! வெளிப்படையாகவே கேட்டுவிடலாமே பி.வி.ஆரைப் பற்றி என்ன எண்ணுகிறீர்கள் என்று! அவர் ஒரு கனவான். 'கல்கியில் தொடர்கதை ஆரம்பமாகும் போது வேறு பத்திரிகையில் ஆரம்பிக்க வேண்டாம்' என்ற கோரிக்கை வாக்கியத்தைக் கூறி முடிக்கு முன்னரே ஏற்று உறுதி அளித்தார். ஆனால் மாலை மதிக்கு என்று அவர் எழுதித் தந்திருந்த ஒரு நாவலைத்திடீரென்றுகுமுதத்தில் தொடர்கதையாக வெளியிடுவார்கள் என்று அவர் எதிர்பார்த்திருக்க முடியாது. கல்கியில் அறிவிப்புக்களை இரண்டு வாரங்களாகப் பார்த்து வரும் குமுதம் இப்படிச் செய்திருக்க வேண்டாம். பி.வி.ஆரிடம் தொடர்கதையாக வெளியிட அனுமதி கேட்க முயற்சி செய்தார்களாம்; அவர் ஊரில் இல்லையாம்; அதனும் அறிவிப்புத் தந்து விட்டார்களாம்! ''இனி ஒன்றும் செய்வதற்கில்லை'' என்கிறார் பாவ்ப்பூ! பி.வி.ஆர். வருத்தப்படுகிறார். கல்கி ஆசிரியரும் நேயர்களும் தன்னைத் தவறாக எடுத்துக் கொள்ளாதிருக்க வேண்டுமே என்று கவலைப்படுகிறார். குமுதத்துக்குத் திடீரென்று எழுத்தாளர் பஞ்சம் வந்துவிட்டதுதான் வியப்பு!

○ பி. ராமகிருஷ்ணன், மேலகிருஷ்ணன்புதூர்.

? சிலுக்கு அடுத்த தேர்தலில் போட்டியிடுவாரோ?

! உஷ்! உரக்கக் கேட்காதீர்கள் ராஜீவ் காதில் விழுந்து வைக்கப் போகிறது.

★ ரூ. 10 பரிசு பெறுபவர் :
ஆர். சிவசுப்பிரமணியன்,
3, மேல வடக்கு மடவிளாகம்
வெளிப்பாளையம் நாகப்பட்டினம்.



# கமல் பதில்கள்

35. சென்ற வாரம் அனுப்பி திரு. நாகராஜன் அவர்கள் கேட்டிருந்த கேள்வி — உங்கள் கோணத்தில் நமது பண்பாடு, கற்பு பற்றி...?

அவர் கேட்ட கேள்வியை மறந்தது என்னவோ தவறுதான்... அவர் இரண்டாவதாக அந்தக் கேள்விக்கு ஒரு சட்டைக் கட்டு கட்டியிருந்ததுதான் எனக்குச் சற்றே கோபத்தை வரவழைத்துவிட்டது. இப்போது கோபம் தணிந்துவிட்டது என்று, அர்த்தமல்ல; கோபம் அப்படியே இருக்கிறது அந்தக் கேள்வியைப் பொறுத்த வரையிலும்.

பண்பாடு பற்றி என்னைக் கேட்கலாம்... ஆண்களுக்கும் கற்பு தேவைதான். ஆக அதைப் பற்றியும் கேட்கலாம். அதைப் பற்றியும் சொல்கிறேன். பண்பாடு என்பது இண்டஸ் வேலி சிவிலிசேஷன்லேருந்து வளர்ந்து அவ்வப்போது மாறுதல்களுக்கு உள்ளாகி வந்துள்ள ஒரு விஷயம். நமது பண்பாடு சிறந்த ஒன்றுதான். அதுவும் தமிழனின் பண்பாடு மிகச் சிறந்தது. விருந்தோம்பலிலிருந்து பல விஷயங்களில் நமது பண்பாட்டில் தனித் தன்மையோடு உயர்வும் உண்டு. அப்புறம் கற்பு, வாத்ஸ்யாயனனின் காலத்தைச் சற்றே மறந்து விட்டுப் பேச வேண்டுமேயானால், கற்பைப் பற்றிப் பேசலாம். நான் வாத்ஸ்யாயனனை மறக்கத் தயாராயில்லே! என்னுடைய நண்பர் வைரமுத்து அவர்கள் கற்பைப் பற்றி வேடிக்கையாக ஒன்று சொன்னார்:

கற்பு —
கண்ணால் பார்த்தாலே கெடுதல்
என்பது அகன்று.
கர்ப்பப்பை வரையிலும்
வந்து விட்டது

என்று சொன்னார். ஒரு மாத்திரையைப் போட்டுக் கொண்டால் கற்பைக் காப்பாற்றிக் கொண்டு விடலாம் என்ற நிலையும் வந்து விட்டது. ஆக கற்பு எங்கே போய்க் கொண்டிருக்கிறது? என்றார். நான் அதை யோசித்துப் பார்த்தேன். கேட்கும்போது சுவாரசியமாக இருந்தது. என் டயரியில் கூட குறித்து வைத்திருக்கிறேன், வைரமுத்து இப்படிச் சொல்லியிருக்கிறாரே என்று. வைரமுத்துவிடம் எனக்கு அதிகப் பிரியம், ஈடுபாடு உண்டு. அவர் சொல்லுவதை உன்னிப்பாகக் கவனிப்பவன் நான். அதைப்பற்றி யோசிக்கும்போது— என்ன தோணிச்சுன்னு:

கற்பு என்பது புருஷாக்கிரமத்தின் ஒரு சாதுரியமான சூழ்ச்சி. கற்பு என்பது நம் பெண்களின் மேல் நாமே கட்டி விட்ட ஒரு மெடல். இப்படித்தான் இருக்க வேண்டும் என்று நமது தாரங்களைப் பாதுகாக்க நாம் செய்த சூழ்ச்சியோ என்று எனக்குத் தோன்றுகிறது. அந்தக் கற்பைக் கர்ப்பப்பை வரை கொண்டு வந்ததே ஆண்கள்தான் என்று சொல்லுவேன். பெண்களை நான் குறை சொல்லவேமாட்டேன். கற்பு என்ற ஒன்றை தங்களுக்கு இன்றி அவர்களுக்கு மட்டுமே உருவாக்கிக் கொடுத்து, அவர்களைக் கட்டிப்

○ ''எம். ஜி. ஆர் இடத்தைப் பிடிக்க முடியாது என்பது ஓர் உண்மை! பிடிக்கக்கூடாது என்பதும் என் நம்பிக்கை!''

## நேரம் நல்ல நேரம்

போட சேஸ்ட்டிடி பெல்ட் உருவாக்கியவர்களும் இந்த ஆண்களே; அது இடுப்பு கற்பைக்கு இறங்கிவிட்டது என்று இப்போது வருத்தப்படுபவர்களும் இந்த ஆண்களே! கற்பு பற்றிய எனது இந்தக் கருத்துக்கு நானே ஒரு பத்திரிகையில் கண்டனம் கூட வரலாம். என்னுடைய எண்ணம் இது. சொல்லிவிட்டேன்.

36. இ. நிரையன், கிருஷ்ணகிரி.
திரையுலகில் திரு எம்.ஜி.ஆர். அவர்கள் இடம் அப்படியே தான் இருக்கிறது. ஆனால் வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு என்கிறார்கள். அதன்படி எம்.ஜி. ஆரின் இடத்தை ஒரு கமலோ, ஒரு ரஜினியோ, இல்லை நானே ஒரு விமலோ வந்து நிரப்பி விட முடியுமா?

இந்த 'வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு' என்பது யாரை வேண்டுமானாலும் குறிக்கலாம். ஆனால் இடம் பிடிப்பது — அதுவும் ஒருவர் விட்டுச்சென்ற இடத்தைப் பிடிப்பது மன்னவர்கள் வேலை. கலைஞனின் வேலையில்லை. கலைஞன் தனக்கென ஒரு இடத்தை ஏற்படுத்திக் கொள்பவன். ஆக, எம். ஜி. ஆரின் இடத்தைப் பிடிக்கும் அருகதை எங்களுக்கு இருக்கிறதா என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். எங்களுக்கு அந்த மனப்பக்குவம் இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். எம். ஜி. ஆரின் இடத்தைப் பிடிப்பது நியாயமா? என்னுடைய அப்பாவின் இடத்தைப் பிடித்திருக்க வேண்டும் என்று நினைத்தால் நியாயம். அப்படியானால் ஒரு வக்கீலாகப் போயிருக்கவேண்டும் நான். என்னுடைய திறமைக்கு வக்கீல் குமாஸ்தாவாகத்தான் போயிருப்பேன்... அப்படியில்லாமல் எனக்கென்று ஒரு தனி இடத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறேன். அதுதான் ஒரு உண்மையான கலைஞனின் பேராசை... எம். ஜி. ஆரின் இடத்தைப் பிடிக்க முடியாது என்பது ஓர் உண்மை. பிடிக்கக்கூடாது என்பதும் என்னுடைய நம்பிக்கை.

37. கா. ராசாமணி. ஸ்ரீவில்லிப்புத்தூர்.
முறையான உடற்பயிற்சி ஒரு மனிதனை எவ்வாறு உருவாக்கும் என்பதற்குத் தங்கள் வடிவும் வனப்பும், ஆற்றலும்சாட்சி. 'களத்தூர் கண்ணம்மா' கமல் போல் உள்ள என் ஏழு வயது மகன் பாலாஜியை, 'சகலகலா வல்லவன்' கமல் போல் மாற்ற, எந்த வயது முதல் என்னென்ன உடற்பயிற்சிகள் கொடுக்க வேண்டும் என்று கூறுங்கள்:

ஏதோ காமா பயில்வான்கிட்ட கேக்கற கேள்வி மாதிரி இருக்கு! இருந்தாலும் எனக்குத் தெரிந்த பயில்வான் ஒருத்தர் இருக்கிறார்... பார்த்தால் பெரிசா ஒண்ணும் தெரியாது... அவர் பெயர் டி. சீனிவாசன். பரமக்குடியில் வசிக்கிறார். அவருக்குத்தான் இந்த ட்ரிக் எல்லாம் தெரியும். அவர்தான் இந்தக் கமலஹாசனை சகலகலா வல்லவன் கமலாக மாற்றும் முயற்சியில் ஈடுபட்டார். அவரும், இப்போது ராஜலட்சுமி என்பவர் இல்லை — அவரும், திரு சாருஹாசன் அவர்களும்...இப்படி என் குடும்பத்தினரைக் கேட்டால் என்னை விட அழகாக அறிவுரை சொல்லுவார்கள். ஏனென்றால், அவர்கள் இல்லையென்றால் இந்தப் பட்டங்களும், இந்தப் பெயர்களும், இந்த ஊக்கங்களும் எனக்கு இருந்திருக்காது. உடற் பயிற்சி பற்றி நிறைய சொல்லலாம். ஆனா இந்த நிகழ்ச்சியில் அதுக்குத் தேவையான நேரம் இல்லை... உடற்பயிற்சியாளர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். நேரில் சென்று கேட்டுக் கொள்வதுதான் நல்லது. பாலாஜிக்கு என் வாழ்த்துக்கள்.!

38. கோபுராஜ், கடலூர்.
நடிகர் கமலஹாசனைப் பற்றி நாலுவரியில், புதுக்கவிதையில், அடக்கத்துடன் சொல்லுங்களேன்?

ரெண்டு இக்கட்டான விஷயத்துல என்னை மாட்டிவிட்டிருக்கீங்க... கவிதை சொல்லும் போது கொஞ்சம் பறக்க விடணும் கவிஞனை. அவன் இறக்கைகளை முறித்து விடக் கூடாது. தாங்களே வழக்கமா சொல்லிக்கும்போது பெருமையா எதுவும் சொல்லிக்கமாட்டோம். இதுல அடக்கம்னு வேறு சொல்லிட்டீங்க. அதுவும் உரை நடையிலே சொல்லணும்னு லும் பரவாயில்லை. புதுக் கவிதையில சொல்லணும்னுட்டீங்க. வெறுங் கவிதை மட்டுமில்லே, புதுக் கவிதை! இது ரொம்ப இக்கட்டான கேள்வி. இத்தனையும் தெரிஞ்சிருந்தா நான்வந்து கண்ணதாசனுக்கு அடுத்த வாரிசாக இருந்திருப்பேன்! அதனால, உங்களுக்குப் பதில் சொல்ல முடியாது. அதுவும் புதுக் கவிதையில், அடக்கமாக. இரண்டு கட்டுப்பாடுகளையும் என்னால் மீறாமல் இருக்க முடியாது. ஆகவே அடுத்த கேள்வியைக் கேளுங்கள் என்று விண்ணப்பிக்கிறேன்!

39. ஷிவா, ராம்நகர், கோவை.
ஆரம்ப காலங்களில் தமிழ் சினிமாவின் அபத்தங்களோடு மாரண்பட்டு,மோதின வீரிய கமலஹாசனை இன்று, வெகுவாய் வளர்ந்து விட்ட பிறகும் அதே அபத்தங்களைத் தன் 'சர்வைவ'லுக்காகச் செய்வதாகச் சப்பைக் கட்டு கட்டுற சாதாரண கமலஹாசனுக்கு நினைவு இருக்கிறதா?

இந்தக் கேள்வி நல்ல அழுத்தமான கேள்வி! என்னையே பலமுறை நானே கேட்டுக் கொண்ட கேள்வி. இதற்குப் பதிலையும் நான் கண்டுபிடித்துவிட்ட நிலையில் இப்போது இருக்கிறேன்.

அதை—

அடுத்த வாரம் சொல்லுகிறேன்!

தொகுப்பு: சித்தார்த்

## படித்துப் பயனடைய...

['காய்ந்தும் கெடுவது பெய்தும் கெடுவது' என்று ஒரு வழக்கு உண்டு. வேளாண்மையைப் பொறுத்தவரை வெள்ளமும் வறட்சியும் ஒரே மாதிரியான அபாயம் தான்.]

அபரிமித மழை, காவிரியில் வெள்ளத்தால் பாதிக்கப்படுவதும் தஞ்சை. மழை பொய்க்க, கர்நாடக மாநிலம் காவிரியில் நீர் விட மறுக்க, பாதிக்கப்படுவதும் தஞ்சை. எனவே வெள்ளத் தடுப்பு, சிக்கனமாகத் தண்ணீரைச் செலவிடுவது ஆகியவற்றில் நவீன வழிகளைத் தெரிந்து கொள்வது நல்லதல்லவா? இத்துறைகளில் ஆராய்ச்சிகள் செய்து சில முக்கியமான பரிந்துரைகளைச்செய்கிறது தஞ்சாவூரில் உள்ள மண், மற்றும் நீர் நிருவாக ஆராய்ச்சி நிலையம். இதன் தலைவரும் இணை வேளாண்மை இயக்குனருமான திரு. ஆ. க. கதிர்வேல் தெரிவித்துள்ள விவரங்கள்:

காவிரிப் பாசனப் பகுதிகளில் மழைக் காலங்களில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டுப் பயிருக்கும், நிலத்துக்கும், உயிர், உடைமைகளுக்கும் பெரும் சேதம் உண்டாகிறது. ஆற்று நீரின் உயரம் குறைவானால் சேதமும் குறையக் கூடும். இதற்கு ஓர் ஆலோசனை பெரும் மழைக் காலங்களில் விவசாயிகள் அனைவரும் தங்கள் வயல்களில் தேங்கியுள்ள தண்ணீரை முழுவதுமாக வடித்து விடக் கூடாது. சுமார் நான்கு அங்குலம் நீரை வயலிலேயே தேக்கி வைத்துக் கொள்ள வேண்டும். இப்படி நீர் வழிகளை ஒட்டி எல்லா வயல்களிலும் நீர் தேக்கி வைக்கப் படுமானால் வெள்ள ஆழம் நிச்சயமாகக் குறையும். வெள்ளச் சேதமும் பெரும் அளவு கட்டுப்படுத்தப்படும்.

வறட்சியான காலங்களில் நீரை விரயமாக்காமல் பயன்படுத்த வேண்டிய வழிமுறைகளும் உள்ளன.

சராசரியாக வயலுக்குச் சேதம் இல்லாமலும் சிரமம் இல்லாமலும் வாய்க்கால் நீரை வினாடிக்கு 5 முதல் 7 லிட்டர் அளவு பாய்ச்ச முடியும். இதற்கு ஒவ்வொரு நெல் வயலும் 50 முதல் 60 செண்ட் பரப்புள்ளதாக இருப்பது நல்லது. பெரிய வயல்களானால் இந்த அளவில் கைவரப்புக்களைக் கொண்டு சிறுசிறு வயல்களாகத் தடுக்க வேண்டும். காவிரிப் பாசனப் பகுதி முழுவதற்குமே இந்த ஏற்பாடு பொருந்தும். மற்ற பாசனப் பகுதிகளில் நிலத்தின் சரிவு 100—க்கு 2 அடி. கீழாக உள்ள இடங்களுக்கும் இது பொருந்தும்.

பிரிக்கப்பட்ட நிலம் மேடுபள்ளங்கள் இல்லாமல் சமப்படுத்தப்பட வேண்டும். அப்போது தான் நிலம் முழுவதும் ஒரே சீரான ஆழத்துக்கு நீர் பாய்ச்சப்பட்டுப் பரவி நிற்க முடியும். மேடு பள்ளங்களாக இருந்தால் ஒரு பக்கம் காய்ந்தும் ஒருபக்கம் நீர் தேங்கியும், பயிர் வளர்ச்சியில் வேறுபாடு ஏற்படக் கூடும். நீர் விரயமும் உண்டாகும்.

# காய்ந்தும் கெட வேண்டாம்

வயலுக்கு வயல் நீரை வடித்துப் பாசனம் செய்வதைத் தவிர்க்க வேண்டும். இதனால் நீர் விரயமும், கால விரயமும் ஏற்படுகின்றன. வாய்க்கால் மூலம் நீர் பாய்ச்சுவதே சிறந்தது. நீர் கட்டும் நேரம் முன்னதைவிடச் சரிபாதிக்கும் மேல் குறைவாகும்.

முன் மழை உழவு செய்வதன் மூலம் கணிசமான அளவு நீர்ச்சேமிப்புக்கு வழி உண்டு. களைகள் கொல்லப்படும். பயிரின் மகசூல் பாதிக்கப்படுவதில்லை. தஞ்சை அதன் சுற்றுப்புறங்களில் மே, ஜுன் மாதங்களில் சராசரியாக எண்பது மி.மீ. மழை பெய்கிறது. ஜுன் கடைசியில் தான் குறுவை நடவு தொடங்குவதால் பயிர் காலத்திற்கு முன் கிடைக்கிற இந்த எண்பது மி. மீ. மழையை முன்மழை உழவுக்குப் பயன்படுத்திவிடலாம். இதன் மூலம் நடவு வயல் தயாரிப்புக்குத் தேவையான 250 மி. மீ. நீர் அளவில் சுமார் நாலில் ஒரு பங்கைச் சேமித்து விடலாம்.

நீர்க் கட்டுப்பாடு இல்லாத காலங்களில் நடவு வயலில் ஓர் அங்குலம் இரண்டு அங்குலம் நீர் கட்டி இருக்கும்படி பார்த்துக்



○ களை மண்டிய மண் வாய்க்கால்



○ நீரினை சமமாகப் பிரித்தளிக்கும் முறை

கொள்ள வேண்டும். இதற்காகத் தினசரி நீர் பாய்ச்சியும் நீர்ப்பராமரிப்புச் செய்ய லாம். இதனால் உச்ச அளவு மகசூல் பெற வாய்ப்பு உண்டு. இப்படி நீர் தேங்கி இருக்கும் போது புகையான் தாக்குதல் இருந்தால் நீரை வடித்துப் பாய்ச்ச வேண் டும். தவிர பயிர் பாதுகாப்புக்கான பி. எச். சி. பத்து சதம் அல்லது வேறு தக்க மருந்துகளைத் தெளித்துப் புகையானைக் கட்டுப்படுத்திவிடலாம்.

வயல்களுக்கு நீர் பாய்ச்சும் போது கால் வாய்களை நான்கு விதமாக அமைத்துச் சோதனை செய்து பார்த்தார்கள். மண் கால்வாயில் நீர் பாயும் போது விரயம் நூறுக்குப் பதினைந்து கன அடியாக இருந்தது. சிமெண்ட் பலகை பதித்த கால்வாயில் விரயம் ஐந்து கன அடியாகவும் செங்கல் கால்வாய், பாலிதீன் தாள் பரப்பிய கால் வாய் இவற்றில் நீர் பாயும் போது விரயம் ஐந்து முதல் மூன்று கன அடியாகவும் இருந்தது.

நீர்த் தட்டுப்பாட்டுக் காலங்களில் நாற் றின் வயதைக் கூட்டுவது ஒரு சிக்கன நட வடிக்கை. இருபது நாள் வயதுள்ள நாற்று

# பெய்தும் கெடவேண்டாம்

ஆனாலும் நாற்பத்தைந்து நாள் நாற்று ஆனாலும் மகசூலில் வீழ்ச்சி எதுவும் ஏற்பட வில்லை என்று கண்டறிந்திருக்கிறார்கள். நடவு வயலில் பயிரின் வயது பத்து நாட்கள் குறைவதால் ஒன்றிரண்டு பாச னங்கள் குறையும். இதன் விளைவாக மகசூல் இழப்பு எதுவும் இல்லாமல் கணிசமான அளவு நீரைச் சேமிக்க முடியும்.

இன்னும் ஒரு வழி: நெல்லுக்குப் பயிர் காலம் முழுவதும் மூன்று அங்குலத்துக்கு மேல் நீர் தேங்காமல் பார்த்துக்கொள்ள வேண்டும். ஓர் அங்குலம் முதல் இரண்டு அங்குலம் ஆழம் வரை நீர் வற்றிய பிறகு நீர் பாய்ச்சுவது நல்லது. குறுவையில் நான்கு நாட்களுக்கு ஒருமுறையும் தாளடியில் ஆறு நாட்களுக்கு ஒரு முறையும் இப்படி நீர் பாய்ச்சினால் போதுமானது.

பயிர்க்காலம் முழுவதும் நடவு வயலில் மூன்றங்குல நீர் தேக்கி வைக்கப்படும்போது மகசூல் குறிப்பிடத்தக்க அளவு குறைவாக இருந்தது. காரணம் வேருக்கு அடியில் சுரி யும் நீரில் தழைச்சத்து மிகமிகக் குறை வாகி விடுகிறது.

எந்தப் பருவத்திலும் சுமார் பத்து நாட்கள் வரை நீர் பாய்ச்சாமல் இருந் தாலும் மகசூல் வீழ்வதில்லை.

நடவு வயலில் தூர் கட்டி முடியும் பரு வத்திலும் கன்று உருண்டு பூக்க ஆரம்பிக் கும் பருவத்திலும் பதினைந்து நாட்களுக்கு நீர் பாய்ச்சாமல் போனால் மகசூல் பாதிப்பு ஏற்படுகிறது. எனவே இந்தப் பருவத்தில் பயிருக்கு நீர்த்தட்டுப்பாடு இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். ஆனால் பால்பிடித்து மணிகட்டும் பருவத்தில் சுமார் பதினைந்து நாட்களுக்கு நீர் கிடைக்காவிட்டாலும் மகசூல் வீழ்ச்சி ஏற்படாது. இந்தக் காலத்தில் நீர்பாய்ச்சா மலிருந்தால் ஓரிரு பாசனங்களைச்சேமிப்பதன் மூலம் பாசன நீரைச் சேமித்து வைக்க முடியும்.

பழைய காலங்களில் மிகுதிப்படுகிற மழை நீரைக் குளங்கள் கண்மாய்களில் தேக்கி வைத்துத் தேவையானபோது பயன் படுத்தி வந்தார்கள். நகர்ப்புறம் விக்கமடை வதன் விளைவாக இப்போதெல்லாம் கண் மாய்களுக்குள் கட்டடங்கள் பயிராகின்றன.

கால்வாய்களிலும் களைகள் மண்டிவிடு கின்றன. (படம்.) இல்லாவிட்டால் மண் மேடிட்டு விடக் கூடும். மண் மேடுவதை அவ்வப்போது அகற்றுவதில் பெரிதும் கவ னம் செலுத்தப்பட வேண்டும். கால்வாய் களில் சலசலவென்று நீர் ஓட்டம் இருந்தால் தானே பாசனம் சிறப்பாக இருக்க முடியும்?

தொகுப்பு: சுப்ர பாலன்

பின் அட்டை வண்ணப்படம்:
கே. ஜி. ராமநாதன்

# தமிழ் உணர்ச்சி, வளர்ச்சி, ஆட்சி!



"தமிழ் மொழி என்பது ஒரு தாமரை என்றால் அதில் தமிழ் இலக்கியம் ஒரு மடல் தான். அதை மட்டும் நாம் பார்த்துச் சந்தோஷப்பட்டுவிட முடியாது. முழுத் தாமரையைக் கண்டுகளிக்கிற நாள் வர வேண்டும்."

சொன்னவர் "பொற்கோ". சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் இலக்கியத் துறை இணைப் பேராசிரியர். (ரீடர் என்பதற்குத் தமிழ் மொழிபெயர்ப்பு சரிதானா?) பொன் கோதண்டராமன் என்ற இயற்பெயர் கொண்ட டாக்டர் பொற்கோ, தமிழ் உணர்ச்சி, தமிழ் வளர்ச்சி, தமிழ் ஆட்சி என்ற தலைப்பில் மூன்று நாட்களுக்குக் கல்கி நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்தினார், சென்னை பல்கலைக்கழகத்தில்.

தமிழன், தமிழ் உணர்ச்சியே இல்லாதிருந்த காலம் ஒன்றிருந்தது. ஆனால் அது மாறி இன்று தமிழ் உணர்ச்சி ஒவ்வொரு தமிழனிடமும் இருக்கிறது. (சிலரிடம் தேவைக்கு அதிகமாகவே கூட இருக்கிறது!) இந்த உணர்ச்சி பல்வேறு அறிஞர்களால் பல்லாண்டுகளாகத் தூண்டி விடப்பட்டும் வந்திருக்கிறது. ஆனால் தமிழ் வளர்ச்சி என்னும்போது , யோசிக்க வேண்டியிருக்கிறது. தமிழ் ஆட்சி என்னும் போது அதை விட அதிகமாகச் சிந்திக்க வேண்டியுள்ளது.

தமிழ் வளர்ச்சி என்பது இலக்கிய வளர்ச்சி மட்டுமல்ல; வேறு எத்தனையோ பல துறைகளில் வளர வேண்டியிருக்கிறதே, இன்னும் வளரவில்லையே என்பது பொற்கோவின் ஆதங்கம்.

"சைக்கிள் இருக்கிறது; ரிஸ்ட்வாட்ச் இருக்கிறது. மிதி வண்டி எனலாம், கைக்கடிகாரம் எனக் கூறலாம். ஆனால் சைக்கிளைப் பிரித்துப் போட்ட பிறகும் கைக்கடிகாரத்தைத் திறந்து நோக்கும்போதும் தமிழ் பயனற்றுப் போய்விடுவதைக் காணுகிறோம்" என்று விசனித்தார் பொற்கோ.

ஆக்கபூர்வமாக நடந்துள்ள காரியங்களையும் பட்டியலிட்டார். தமிழ் வளர்ச்சிக்கு யார் யாரெல்லாம் உதவியிருக்கிறார்கள்; எந்தெந்த அமைப்புகள் எப்படி எப்படியெல்லாம் பாடுபட்டிருக்கின்றன என்று விவரித்தார். பெரியார் – ராஜாஜி முதல் இ.ஜ.ர. வரை பல அறிஞர்களின் கருத்துக்களை எடுத்துக் கூறினார்.

தமிழை ஆட்சி மொழியாக்கத்தான் எத்தனை இடையூறுகள் சில நியாயமான காரணங்கள், சில சால்ஜாப்புகள்! தட்டச்சுப் பொறிகள் போதிய அளவு இல்லை என்று ஒரு சாக்கு. மருத்துவச் செலவினத்தைத் திரும்பப் பெற அரசுக்கு விண்ணப்பிக்கும் போது மருந்துகளின் பெயர்களைத் தமிழில் எழுத முடியாதே என்று ஒரு நொண்டிச் சமாதானம்! இப்படி எத்தனை எத்தனையோ இடையூறுகளைத் தாண்டித் தமிழ் ஆட்சி மொழியாகியே விட்டது! இருந்தும் அதற்கு மதிப்பும் மரியாதையும் தரப்படுகிறதேயொழிய முழுமையாக அனைவராலும் அனைத்துக் காரியங்களிலும் பயன்படுத்தப்படுவதாகக் கூற முடியாது. அதேபோல் தமிழைக் கல்லூரிகளில் போதனா மொழியாக்குவது என்பது ஒரு கௌரவப் பிரச்னையாகிவிட்ட பிறகு நிறைவேற்றி வைக்காதிருக்கலாமா? ஆனால் வாழ்க்கைக்குப் பயன்படும் கல்வி இன்னும் அமையாததால் தமிழும் வாழ்க்கைக்குப் பயன்படுவதாக இல்லை. (தமிழாசிரியர் உத்தியோகம் தவிர!) எனவே அதைப் போதனா மொழியாக ஏற்பதிலும் மாணவர்களிடம் நியாயமான தயக்கம் நிலவுகிறது.

இப்படிப் பல பிரத்யட்ச உண்மைகளை யார் மனத்தையும நோகச் செய்யாதவிதமாக, நயமாக, சர்வ ஜாக்கிரதையாகக் கூறி வந்த பொற்கோ, சீனா, ருஷ்யா, ஜப்பான், இந்தோனேசியா முதலான நாடுகளில் அந்நாட்டு மொழிகளை வளர்க்க என்னென்ன முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன என்பனவற்றை விவரித்தார்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்ட பிறகு, நமக்கென்னவோ ராஜாஜியின் கருத்துத்தான் பல மொழிகள் பேசப்படுகிற நமது நாட்டுக்கு, அதன் ஒருமைப்பாட்டுக்கு, மொழிகளின் வளர்ச்சிக்கு ஏற்றதாகத் தோன்றுகிறது.

பிறநாடுகளில் மொழிகள் வளர்ந்தபின் புதிய சொற்களை அகராதிகளில் சேர்க்கிறார்கள். நாமோ மொழியை வளர்ப்பதற்கு முன்பே அகராதிகளைத் தயாரித்துக் கொண்டிருக்கிறோம் என்றார் ராஜாஜி.

மொழி எப்படி வளரும்? பல புதிய வார்த்தைகள் பழக்கவழக்கத்துக்கு வருவதன் மூலம்தான். இதை எப்படிச் சாதிப்பது? ஆங்கிலத்தில் மாணவர்களுக்கு நல்ல தேர்ச்சி வேண்டும். பாடப் புத்தகங்கள் ஆங்கிலத்தில் இருக்கவேண்டும். தமிழில் பாடங்கள் விளக்கப்படல் வேண்டும். அப்படி விளக்கும்போது ஆங்கிலக் கலைச் சொற்களை அப்படி அப்படியே எடுத்துப் பயன்படுத்தித் தமிழாகவே ஆக்கிப் பழக்கத்துக்குக் கொண்டுவர வேண்டும். இந்தவிதமாகத் தமிழில் ஏராளமான புதிய வார்த்தைகள் உருவாகி, தமிழ் வளர்ந்த பிறகு, தமிழில் சட்ட, விஞ்ஞான நூல்களை எழுதுவதும், அவற்றைப் படித்துப் புரிந்து கொள்வதும் எளிதாகிப் போகும். அகராதிகளும் தயாரிக்கலாம். ஆங்கிலமே இந்தவிதமாக வளர்ந்த மொழிதான் என்று எடுத்துக்காட்டியவர் ராஜாஜி.

— குட்டி கிருஷ்ணன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of
Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road,
Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

# தேநீரும் விருந்தோம்பலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்

உங்கள் இல்லத்திற்கு வருகை தரும்
நண்பருக்கு முதலில் வழங்குவது எது ?
நல்வரவு என்று சொல்லும் புன்னகையும்
நல்லதொரு கோப்பை தேநீரும் தானே !
அது வழி வழியாய் வரும் உங்களுடைய
கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில்
காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள்
இருந்தால் ? உடன் புதிய பால் கிட்டாத
நிலையானாலோ ?

ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள்
பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண
உதவுகிறது. சிக்கனமாக, விரைவாக,
எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்கு
களுக்கும் இது ஈடு இணையற்றது..




ASP/SMP/5/84

# ஸாகர்

## ஸ்கிம் மில்க் பவுடர்

**கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான குணங்கள் உண்டே இதில்.**



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங்
ஃபெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10,
ஆனந்த் 388 001, குஜராத்.

